

# ஸப்தகிரி

ஜூலை. 1987 விலை ரூ. 1/-

திருமலை திருப்பதி தேவஸ்தான சமய மாத இதழ்



கல்லாலின் புடையமர்ந்து நான்மறை
ஆறங்கம் முதற்கற்ற கேள்வி
வல்லார்கள் நால்வருக்கும் வாக்கிறந்த
பூரணமாய், மறைக்கப்பாலாய்
எல்லாமாய் அல்லதுமாய் இருந்ததனை
இருந்தபடி இருந்துகாட்டி
சொல்லாமல் சொன்னவரை நினையாமல்
நினைத்து பவத் தொடக்கை வெல்வாம்.

—திருவிளையாடற் புராணம்.

ஜூலை, 1987

# ஸப்தகிரி

இதழ் 2 மலர் 18

## உள்ளுறை



### அட்டைப்பட விளக்கம்

முன்னட்டையில் : திருமலைக்கோயில் ஆனிவார ஆஸ்தானத்தின்போது புஷ்ப பல்லக்கில் உற்சவர்.

2-வது, 3-வது : படிவிழா நிகழ்ச்சிகள்.

பின்னட்டையில் : ஸ்ரீ கல்யாணவேங்கடேஸ்வர சுவாமி திருக்கோயில்—ஸ்ரீநிவாச மங்காபுரம்.

சிறப்பாசிரியர் :
திரு. சி.எச். வெங்கடபதிராஜு I.A.S.,
செயலாட்சித் தலைவர்,
தி.தி.தேவஸ்தானம், திருப்பதி.

ஆசிரியர் :
திரு. கே. சுப்பாராவ், எம்.ஏ.

துணையாசிரியர் :
திரு. என். எஸ். ராமமூர்த்தி, எம்.ஏ.,

அச்சிடுபவர் :
திரு. எம். விஜயகுமார் ரெட்டி,
மேலாளர்,
தி.தி. தேவஸ்தான அச்சகம்,
திருப்பதி.

பிரதிகளுக்கு :
EDITOR,
"Sapthagiri"
T. T. Devasthanams,
TIRUPATI.

# உங்களுடன் . . . .

'அளவுக்கு மீறினுல் அமிர்தமும் விஷமாகும்' என்பது பொன்மொழி. அன்பு செலுத்துவதில் தாய்க்கு நிகர் இத் தாரணியில் எவரும் இல்லை.அவ்அன்பே அளவுக்கு மீறிடும் போது,அவ்அன்பு பெற்றவரே அத்தாய்க்கு ஒரு தொல்லை யாக விளங்கிடும் அவல நிலையை நாம் இன்றும் காணலாம். தான் பெற்ற குழந்தையின் அன்றுடத் தேவைகளைப் பூர்த்தி செய்யும் ஒரு தந்தைக்கு நிகர் எவரும் இருந்திட முடியாது.செய்து தரும் அவ்வசதிகளே தான் பெற்ற செல்வங் களைச் சீரழிக்கும் ஒரு சூழ்நிலையை நாம் நம் வாழ்க்கையில் பார்த்திடலாம். ஆனுல் இவை அடுத்து ஒருவன் பெற்றிடும் நல்லறிவு-நல்ல கல்வி அதன் அளவு பெருக, பெருக அவனை மனிதனுகவும், மாமேதையாகவும் வளர்க்கின்றது.இதனுல் அவனுக்கோ, அவன் வீட்டிற்கோ, இம்மண்ணிற்கோ அவன் ஒரு தொல்லையாக இருப்பதில்லை. இது அக்கல்வியின் சிறப்பாகும்.இத்தகு பெருமைமிகு கல்வியினை ஒருவன் ஓர் ஆசிரியர் சமுதாயத்திடமிருந்துதான் பெற முடியும். ஒரு தாயின் அன்பையும், ஒரு தந்தையின் அரவணைப்பையும் தன்னுடன் கொண்டு ஒருவனை மனிதனுக உருவாக்கும் சிறப்பும் தகுதியும் ஒரு ஆசிரியர்க்கு மட்டுமே உண்டு. இவர்களைத்தான் ஆன்றேர் அன்று 'ரிஷிகள்' என்றும் 'ஆசார்யர்கள்' என்றும் 'குருக்கள்' என்றும் பல பெயர்களில் அழைத்து, அவர்களைத் தங்கள் வாழ்க்கையில் முக்கிய பங்கேற்க வைத்துத் தங்களை மேம்படுத்திக் கொண்டனர். 'ரிஷிகளில் நான் வியாசராக இருக்கின்றேன்'என்று கூறி அவ்ஆதிகுருவுக்கு ஏற்றம் தந்தான் கண்ணன் தன் கீதையில். இது மட்டுமா? கரையிலா கல்வியின் மொத்த உருமான அவ்ஆதிநாயகனுன கண்ணன் சாந்தீபினியை தன் குருவாக ஏற்றுக்கொண்டது, வாழ்க்கையில் ஒரு குருவின் முக்யத்துவத்தை எடுத்துக் காட்டத்தான். இந்து சமயத்தின் முப்பெரும் காவலர்களாக இருந்து, முப்பெரும் தத்துவ வழிகளைக் காண்பித்தவர்கள் சங்கரர், ராமானுஜர், மத்வர் ஆகியோர். இவர்களுக்கும் ஆசார்யர்கள் இருந்தனர். இச்செய்திகள் யாவும், ஞானியானு லும் அவன் அப்பரம்பொருளை அறிய, அவனுக்கென்று ஒரு வழிகாட்டி தேவை என்பதைச் சுட்டிக்காட்டத்தான். ஒவ் வொரு சீடனின் பெருமையும் அவனது குருவின் அருமையையும், ஞானத்தையும், ஏற்றத்தையும் விளக்கிக் கூறும். சீடனின் குறைகள் யாவும் குருவின் குற்றங்களாகக் கருதப்பட்டன. இதைத்தான் நீதி நூல் ஒன்று 'சிஷ்ய பாபம் குரும் வ்ரஜேத்' என்ற தொடர் மூலம் குறிப்பிட்டது.

''குரோர்ரனுக்கிரகாதேவ புமான் பூர்ணக: பிரஜாயதே'' என்றபடி குருமூலம்தான் மனிதன் முழுமை அடை கின்றுன். மனிதனுள் உறையும் இறைவனைக் காண்பதுதான் இப்பிறவியின் இலட்சியம். அதனை அடையச் செய்யத்தான் அன்றைய குருக்கள் செயற்பட்டனர். அன்றைய பாரதம்,பாரில் சிறந்தோங்கக் காரணம் குரு-சிஷ்யன்;ஆசிரியர்-மாணவன் உறவு உன்னதமாகவும், தூய்மையாகவும், பெருமைப்படத்தக்கதாகவும் விளங்கியிருந்ததனுல்தான். சிஷ்யர்களுக்காக அன்றைய குருக்கள் தங்களையும், தங்கள் இன்ப துன்பங்களையும் தியாகம் செய்தனர். அதற்கான வாழ்க்கை நலப்பண்புக் கூறுகள் அவர்களிடம் இயற்கையாகவே அமைந்திருந்தன. இச்சூழ்நிலைதான் நம் பாரத மண்ணை உலகோர் வியக்கும் 'ஞான பூமியாக' விளங்கச் செய்தது.

இத்தகு பெருமைமிகு 'ஞான பூமி' இன்று வன்முறைகளுக்கும், லஞ்ச லாவண்யங்களுக்கும் உள்ளாகி, அமைதியற்ற,வளர்ச்சிக் குன்றிய நிலைக்கு இறங்கியுள்ளது. இது ஒரு கசப்பான உண்மை. குறைகளைத் தெரிந்து கொண் டால்தான், அவற்றைக் களைந்து, நம்மிடையே 'நிறைகளை' வளர்த்துக் கொள்ள முடியும். இந்நிலை உருவாக வேண்டு மானுல் ஆசிரியர்களுக்கும், நாளைய தலைவர்களான இன்றைய மாணவர்களுக்கும் உள்ள உறவினை எண்ணிப் பார்க்க வேண்டும். மனித வாழ்நாளில் மூன்றில் ஒரு பங்கான இளமைப் பருவம், பள்ளிகளிலும் கல்லூரிகளிலும் அமைந்து விடுகின்றது.இக்காலக் கட்டமே எதிர்காலத்தில் அவனுடைய மீதிக் காலத்தைச் செம்மையுறச் செய்யும் அடித்தளமாகும். அவ்அடித்தளத்தில்தான் வீடும், நாடும் முன்னேற வேண்டும். தாய் தந்தை மற்றும் மற்றைய உறவுகளையும் விட அவன் ஆசிரியர்களிடம் அதிக உறவு அவனையும் மீறி வைத்துக் கொள்ள வேண்டிய ஒரு கட்டாயச் சூழலில் இருக்கின்றுன்.

கேட்டு அறிவதைவிட, பார்த்துப் பெறுவது மிக எளிது எனும் உளவியல் பண்புக்கூறு சராசரி மனிதனிடம் என்றும் உள்ளது. 'ஆசிரியர்களின் நடவடிக்கைகள், பண்புகள் ஏன் ஆடை அலங்காரங்கள் கூட மாணவ, மாணவிகளை மறைமுகமாகவோ நேரிடையாகவோ தாக்குகின்றன. ஆம், ஆசிரியர் விளக்கிக் கூறும் செய்திகளைவிட அவரைப் பார்த்துப் பெறப்படும் விஷயங்களே மாணவனை பெரிதும் ஈர்க்கின்றன. முப்பது ஆண்டுகளுக்கு முன்பு சுமார் 30 மாணவர்களைக் கொண்டு விளங்கிய வகுப்பறை ஒன்று, இன்று 80, 90 மாணவர்களைக் கொண்டு விளங்கும் நிலையில், ஆசிரியர் என்ன கூறுகிறுர் என்று ஆறும் வரிசை மாணவர்களுக்கே கேட்காத நிலையில், ஆசிரியர் - மாணவர்கள் உறவு பெரும் பங்கு வகிக்கின்றது. ஏட்டுக்கல்வியைவிட வாழ்க்கைக் கல்வியே இன்று மிகவும் தேவை. மாணவனை மனிதனுக உலவச் செய்ய வேண்டுமென்பதே இன்றைய ஆசிரியரின் குறிக்கோளாக இருக்க வேண்டும். இந்த அடிப்படை பாடத்தில்தான், விஞ்ஞானமும், தொழில் திறமும் முன்னேற வேண்டும். ஆகவே ஆசிரியர், ஆசிரியர்களுக்கான பண்புகளுடன் விளங்கு தல் அவசியம். மதுநெடியுடன், புகை வளையங்களுடன் வகுப்பறைக்குள் நுழையும் ஆசிரியர்கள் இன்று எத்தனைப் பேர். விளக்கம் கேட்டு வரும் மாணவிகளைத் தீண்ட நினைக்கும் ஆசிரியர்கள் இன்று எத்தனை பேர்! இவர்கள் எண்ணிக்கை யில் குறைவாக இருக்கலாம். ஆனுல் இவர்கள் ஒரு குடம் பாலில் ஒரு துளி விஷம் போன்றவர்கள். இத்தகைய ஆசிரியர் ஒருவரால் அவர் வழியில் 20 மாணவர்கள் நடைபோட வாய்ப்புக்கள் அதிகம். இத்தகு ஆசிரியர்கள் தங்க ளைத் திருத்திக்கொண்டால் அது குரு பாரம்பர்யத்திற்குச் செலுத்திடும் ஒரு மகத்தான நன்றியாகும். மாணவர் கள் தங்களிடம் பயப்படவேண்டும் என்று எதிர்பார்க்காது, தங்களை மதிக்க வேண்டும் என்பதைக் கருத்திற்கொண்டு ஆசிரியர்கள் தங்களிடையே நேர்மை, எளிமை, தியாகம், துணிவு, விரைவு எனும் பண்புகளை வளர்த்துக் கொண்டார்களே யாறுல், அது குரு எனும் சொல்லிற்கு உண்மையான ஏற்றம் தருவதோடு அமையாது, நாளைய இந்தியாவை பொறுப் புள்ள ஆற்றல் மிக்க இளைஞர்களிடையே ஒப்படைக்க வழிவகுக்கும் என்பதை, எதிர்வரும் குரு பௌர்ணிமையினை மன திற்கொண்டு, தாழ்மையுடன் ஆசிரியர் சமுதாயத்திற்கு நினைவுபடுத்த விழைகின்றோம்.

# ஆசிரியருக்கு....

ஆசிரியர் அவர்களுக்கு,

ஸப்தகிரி மே மாத இதழில்''ஆசாரமும் அனுஷ்டானமும்'' என்ற தலைப்பில் கட்டுரை திரு எஸ். இராமசாமி மதுரை என்ற பெயருடன் வெளியிடப்பட்டதைப் பார்த்தேன். சென்னையில் இருந்து வெளிவரும் 'ஞானபூமி' என்ற மாத இதழில் 'விஞ்ஞானமும் மெய்ஞானமும்' என்ற தலைப்பில் 'ஷெட்மி' என்ற தொகுப்பாசிரியர் பெயரில் ஏற்கெனவே வெளியிடப்பட கருத்துக்கள் அப்படியே மேற்கண்ட கட்டுரையில் யில் உள்ளது என்பது தாங்கள் அறியாதது ஏனோ!

தொடர்ந்து ஸப்தகிரி வாசிக்கும் வாசகர் என்ற முறையில் சில குறைபாடுகளையும் களையவேண்டி சுட்டிக் காட்ட விரும்புகிறேன்.

தங்கள் தி. தி. தே. மேலாண்மையிலிருந்து மலிவுக் கட்டணத்தில் பத்திரிகை நடத்துவதே எல்லோரும் படித்துப் பயன் பெறவேண்டும் என்ற முக்கிய குறிக்கோளுக்காகத்தான். ஆனால் எல்லோரும் படித்துப் புரிந்து கொள்ளும்படி பல கட்டுரைகள் அமைவதில்லை. சம்ஸ்கிருத சுலோகங்கள் மேற்கோள் காட்டி குறிப்பிடுவது தவறு ஏதும் இல்லை. அவசியமும் கூடத்தான். ஆனால் வைஷ்ணவப் பதம் என்ற அமைப்பில் மிகக் கடினமான பலருக்குப் புரியாத, குறிப்பாக வைஷ்ணவ இளைய தலைமுறையினருக்குக் கூட விளங்காத, வழக்கில் குறைவாக உள்ள வைஷ்ணவப் பதங்கள் பெருவாரியாக கையாளப்பட்டுக் கட்டுரைகள் வருகின்றன. அதன் பொருள் என்ன என்பதே பலருக்கு விளங்கவில்லை.எல்லோருக்கும் புரியும்படி கட்டுரை அமைந்தால்தான் சமயத்தொண்டு ஆற்றுவதில் பொருள் இருக்கும். மிகச் சிலர் மட்டும் புரிந்து கொள்ளும்படி கட்டுரைகள் அமைவது ஆரோக்கியமான பத்திரிகை வளர்ச்சிக்குப் புரையோடும் அமைப்பாகும்.

ஆனால் மேற்கண்டவைகளுக்கு விதிவிலக்காக ஸ்ரீஆண்டாள் அருளிய திருப்பாவைப் பொருள் விளக்கம், கீதை காட்டும் நல்வழி, திருமந்திரம் த்வயத்தின் பொருள் விளக்கம் மற்றும் சில கட்டுரைகள் பாராட்டும்படியாகவும் உண்மையில் சிறப்பாகவும் அமைந்துள்ளன.

இதைத் தவிர்த்து மற்ற சமய பத்திரிகைகளில், புத்தங்களில் வெட்டி எடுத்த கட்டுரைகளை வெளியிடுவதும் பலருக்குப் புரியாத வார்த்தைகளைக் கையாண்ட காட்டுரைகளை வெளியிடுவதும் உன்னதமான பணியாகாது.

மற்ற சமய மாத பத்திரிகைகளைவிட விலை குறைவாக பத்திரிக்கை வெளியிடுவது பாராட்டப்பட வேண்டியதுதான். ஆனால் தரம் குறைவாக ஆவதை தாங்கள் அனுமதிக்கலாமா?

மு. ராஜேந்திரன், சிவகங்கை.

அன்புடையீர்!

ஏப்ரல் ஸப்தகிரி இதழில் வெளியான'துவயத்தின் பொருள் சுருக்கம்' எனும் கட்டுரை மிகச் சிறந்த முறையில் அமைந்திருந்தது. வைணவ'சம்ப்ரதாய' விஷயங்களில் ஒன்றான இத்தலைப்பு மிகவும் கடினமாக இருந்தாலும், அப்பொருளினை மிக எளிமையாகத் தெளிந்த முறையில் சாதாரண மானவரும் புரிந்து கொள்ளும் வகையில் ஆசிரியர் எழுதியிருந்தார். இது போன்று கடினமான 'வைணவ ஸம்ப்ரதாயம்' சம்பந்தப்பட்டப் பொருள்களை இதழில் வெளியிட்டால் அது சமய வாசகர்களுக்கு ஒரு வரப்பிரஸாதமாக அமையும்.

வி. இராஜகோபாலாச்சாரி, கோவை-39.

அன்புடையீர்!

''சிவனை விட விஷ்ணு உயர்ந்தவர்' என்னும் கருத்தை நிலை நாட்டும் வகையில் வால்மீகி திருவுள்ளவிளக்கு (ஸப்தகிரி மே,1987) என்னும் கட்டுரை அமைந்துள்ளது.

சமரச நோக்கை வலியுறுத்தும் இக்காலத்தில் 'சிவன் பெரிதா? விஷ்ணு பெரிதா?' என்ற தேவையற்ற சர்ச்சையைக் கிளப்ப இது காலமில்லை.

விஷ்ணுவைப் போற்றி எழுதினால் யாருக்கும் நஷ்டமில்லை. என்னைப் போன்ற வைணவர்களுக்கு அது நன்மையே செய்யும். அதற்காகச் சிவ பங்கம் தேவையில்லை. சிவன் அநாதி முறை தெய்வம். அவனுக்குத்தோற்றமும் இல்லை; ஒடுக்கமும் இல்லை. விஷ்ணு தோற்றத்திற்கு வந்தவர் என்கிறது கட்டுரை (ஸப்தகிரி 1987 பக். 36, 3 ஆம் பத்தி இறுதிக்கு முந்தின பாரா) அப்படியானால் விஷ்ணுவுக்குத் தோற்றமும் ஒடுக்கமும் உண்டு என்பது உட்கருத்து. தோற்றமும் ஒடுக்கமும் உள்ளவரைப் பிரமம் என்று எப்படிக்கூறுவது? விஷ்ணு பரம்பொருள் இல்லை என்று வரும். இது அபத்தம். ஷண்மத அடிப்படைக்கு ஒவ்வாது.

மேற்படி கட்டுரையில் கண்ட மாதிரி ஆராய்ச்சிகள் தேவையற்றவை. இந்து மதத்திற்கு ஊறு செய்யும். ஷண்மதத்தில் உள்ள மூர்த்தி ஒவ்வொன்றும் தனித்தனி. ஒன்றுக் கொன்று பங்கம் வராமல் கட்டுரை அமைவது நல்லது.

ஸப்தகிரி ஆசிரியர் இவ்விஷயத்தில் கவனம் செலுத்துவது நல்லது.

நா. வேணுகோபாலன், மதுரை.

★

கடவுளை நம்பினோர் கைவிடப் படார் என்பது தமிழ்நாட்டுப் பழமொழி. இக் கருத்தை எல்லா நாட்டு மக்களும் ஏற்றுக்கொண்டுள்ளனர். தங்கள் கவலைகளையும் துன்பங்களையும் துடைப்பதற்குக் கடவுளைத் தவிர வேறு வழியில்லை என்று உறுதியாக நம்புகின்றனர். மனிதர்களால் ஒரு செயல் செய்ய முடியாதபோது, கடவுள்தான் அதனைச் செய்து முடிக்க முடியும் என்று நினைக்கின்றனர். உயிருக்குப் போராடும் நோயாளியை நன்கு கவனித்துக்கொள்ளும் டாக்டர்கள் கூட, தங்களால் முடியாத போது 'இனி கடவுள்தான் காப்பாற்ற வேண்டும்' என்று சொல்லுவதைச் சில சமயங்களில் கேட்டிருக்கிறோம்.

டுகிறார்கள். வலிமை மிகுந்தவர்கள் சாதாரண மக்களை வருத்துவது உண்டு. எளியவர்களால் அவர்களை எதிர்த்து நிற்க முடியாதபோது, தெய்வத் திருவருளை வேண்டுகின்றனர். திக்கற்றவருக்குத் தெய்வமே துணை என்று சொல்லிப் பகையை ஒழிக்குமாறு வரம் வேண்டுகின்றனர். இவ்வாறு இறைவனிடம் மக்கள் வேண்டும் வரங்கள் பலவிதம்.

நூற்றைம்பது ஆண்டுகளுக்கு முன்பு, தமிழ்நாட்டில் வெள்ளாடைச் சான்றோர் ஒருவர் இருந்தார். 'ஜீவகாருண்ய ஒழுக்கமே மோட்ச வீட்டின் திறவுகோல்' என்பதை எடுத்துக் கூறிய மாமுனிவர் அவர். 'வாடிய பயிரைக் கண்டபோ

தனிமனிதனாக ஒருவன் எதையும் சாதித்துவிட முடியாது. சமுதாயமாகக் கூடி வாழும்போதுதான் அவனுக்கு எல்லா வாய்ப்புகளும் கிடைக்கின்றன. அதனால் பலருடன் கூடிப் பழகும் உறவு மனப்பான்மை வேண்டும். அந்த உறவு நல்லோருடன் உண்டானால்தான் நன்மைகள் உண்டாகும். 'சேரிடம் அறிந்து சேர்' என்பது, இந்தக் கருத்தைத்தான் பலகாலமாக வற்புறுத்தி வருகிறது. அதிலும் கடவுளின் அடியார்களுக்கு அவர்களைப் போன்ற அன்பர்களின் உறவு அல்லவா வேண்டும்? அடியார்களின் உறவு வளரும்போது ஆண்டவனிடம் கொண்ட பக்தி பலம் பெறுகிறது. பகவத் பக்தியின் உறுதி

# வேண்டும் வரம் தர வேண்டும்

கடவுளர் திருக்கோயில்கள் அருகிலிருந்தாலும் தொலைவில் இருந்தாலும், காட்டிலிருந்தாலும் மலையில் இருந்தாலும் அங்கெல்லாம் சென்று மக்கள் வழிபடுகின்றனர். சாலை வசதி இருந்தால் வாகனங்களிலும், சாலை வசதி இல்லாவிட்டால் நடந்தும் சென்று தெய்வ தரிசனம் செய்கின்றனர். கோயில்களுக்குப் போக முடியாத நிலையில் இருப்பவர்கள், தாம் இருந்த இடத்தில் இருந்தவாறே பிரார்த்தனை செய்கின்றனர்.

இறைவனை வணங்குகின்றவர்கள் தங்கள் குறைகளையும் துயரங்களையும் சொல்லி, அவற்றைத் தீர்க்க வேண்டும் என்று முறையிடுகிறார்கள். வளமான வாழ்க்கைக்கு வழிகாட்ட வேண்டுமென்று வணங்குகிறார்கள். இனிய வாழ்க்கைக்கு வரங்கள் பல வேண்டுகிறார்கள். நிறைந்த செல்வம் வேண்டும்; நீண்ட ஆயுள் வேண்டும்; சிறந்த கல்வி வேண்டும்; மனைவி மக்கள் சுற்றம் மகிழ்வுடன் வாழ வேண்டும் என்றெல்லாம் வரம் வேண்

தெல்லாம் வாடினேன்' என உயிர் இரக்கத்தைத் தமது கொள்கையாகக் கொண்ட தவச்சீலர் அவர். வடலூர் வள்ளர் என மக்களால் போற்றப்பட்ட அக் கருணை வள்ளல், சென்னை கந்தகோட்டப் பெருமானிடம் கனிந்த பக்தி உடையவர். தேனூறும் திருஅருட்பாக்களால் நாள்தோறும் அப்பெருமானை அர்ச்சித்தவர். உலகம் உய்ய உயர்ந்த அருள் புரிய வேண்டும் என்று இறைவனை வணங்கும் அவர், தமக்காகவும் சில வரங்களை அப்பெருமானிடம் வேண்டுகின்றார். சாதாரண மக்கள் கேட்கும் வரங்களிலிருந்து அவை மாறுபட்டிருக்கின்றன. தனிமனிதன் தனது நல்வாழ்விற்காகக் கேட்கும் வரங்களைப் போல அவை இல்லை; இறைநெறி தழைப்பதற்குக் கேட்கப்பட்ட வரங்களாகவே அவை அமைந்திருக்கின்றன.

புலவர் பெ. கிருஷ்ணராஜன், எம்.ஏ.,
சேலம்-6.

யைப் பாகவத பக்தியே வெளிப்படுத்தும். அதனாலன்றோ,

தனிமாத் தெய்வத் தளிரடிக்கீழ்ப்
புகுதல் அன்றி அவனடியார்
நனிமாக் கலவி இன்பமே
நாளும் வாய்க்க நங்கட்கே

என நம்மாழ்வார் (எட்டாம் திருவாய்மொழி - நெடுமாற்கடிமை - பா 7) இறைவனை வேண்டுகின்றார். வடலூர் வள்ளல் இராமலிங்கமும் வாழையடி வாழையென வருகின்ற அடியார் கூட்டத்துள் ஒருவரல்லவா? எனவே நம்மாழ்வாரைப் பின்பற்றி,

ஒருமையுடன் நினது திருமலரடி
நினைக்கின்ற
உத்தமர்தம் உறவு வேண்டும்.

என முதல்வரத்தைக் கேட்கின்றார்.

மனம் வாக்கு காயம் மூன்றும் ஒன்றுபட்டு நடப்பதுதான் உத்தம வாழ்வு. ஆனால் பலரிடத்தில் மனம் வேறாகவும், சொல் வேறாகவும்,

செயல் வேறாகவும் இருப்பதைக் காணலாம். உள்ளத்தில் ஒரு கருத்தை வைத்துக்கொண்டு, வெளியில் அதற்கு மாறாகப் பேசுகின்ற புறங்கூறுவோரை நீதி நூல்களெல்லாம் கண்டிக்கின்றன. அப்படிப்பட்ட வஞ்சகர்களை நம்மால் சில சமயம் அடையாளம் கண்டுகொள்ள முடியாமல் போய் விடுகிறது. போலிகளை உண்மையென்று நம்பி ஏமாந்து விடுகிறோம். தெய்வ சக்திதான் அவர்களை அடையாளம் காட்டி, நம்மை வாழ்விக்க முடியும். சைவ நெறி தழைக்க உழைத்த மாணிக்கவாசகர், ஒரு சமயம் போலிகளிடம் ஏமாந்த போது, இறைவன் தமக்குச் சரியான வழிகாட்டியதாகக் குறிப்பிடுகிறார். 'முக்தி நெறி அறியாத மூர்க்கரொடு முயல்வேனை, பக்தி நெறி அறிவித்து' என மணிவாசகரே இதனைக் கூறுகிறார். எனவே, உத்தம அடியார் போல விளங்கும் அவருள்ளும், உள்ளொன்று வைத்துப் புறமொன்று பேசும் தீயவர்களின் உறவு தம்மோடு கலக்கக்கூடாது என்பதை

> உள்ளொன்று வைத்துப்
> புறம்பொன்று பேசுவார்
> உறவு கலவாமை வேண்டும்.

என, இரண்டாவது வரத்தைக் கோருகிறார் வடலூர் வள்ளல்.

பேசுகின்ற சொற்களெல்லாம் பெருமான் புகழைச் சொல்லுவனவாகவே இருக்க வேண்டும் என்பது தான் அடியார்களின் விருப்பம். 'நின்பெருமை பேசாத நாளெல்லாம் பிறவா நாளே' என்று கூறியவரும் ஒரு அடியவரே. இறைவன் அடியவர்தம் புகழ்மொழிக்கு மகிழ்பவன் என்பதைச் சொற்றமிழால் பாடுக எம்மை எனச் சிவபெருமான் சுந்தரரிடம் கூறியதனால் அறியலாம். எனவே, வடலூர் இராமலிங்கம் இறைவனது புகழையே பேச வேண்டும் என விரும்புகிறார். ஆனால், புகழ்ந்து பேசுவது என்றால், இல்லாததை இருப்பதாகச் சொல்லுவது என்று பலர் நினைக்கிறார்கள். இது தவறு. ஒருவரிடம் இருக்கும் சிறப்புகளைச் சுவைபட எடுத்துச் சொல்லுவதுதான் புகழ்தல் எனப்படும். இறைவன் எண்ணற்ற சிறப்புகளுக்கு இருப்பிடமானவர். இறைவனுக்குப் பெருமை சேர்க்க வேண்டும் என்பதற்காகப் பொய்யானவைகளைப் பேச வேண்டியதில்லை. அவைகளை இறைவனும் விரும்பமாட்டார். ஆகவே, வடலூர் வள்ளல்

> பெருமைபெறும் நினதுபுகழ் பேச
> வேண்டும், பொய்ம்மை
> பேசாதிருக்க வேண்டும்

என, அடுத்த இரண்டு வரங்களை வேண்டுகிறார்.

உலக மக்கள் அனைவரும் உறவினரே என்னும் கருத்து பல ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்பே சொல்லப்பட்டது. தேசிய ஒருமைப்பாடு-அகில உலக ஒருமைப்பாடு என்னும் கருத்துக்கள் இன்று சின்னஞ்சிறு கிராமங்களில் கூட முழங்குகின்றன. எல்லா இடங்களிலும் மனித நேயம் வற்புறுத்தப்படுகிறது. ஆனால் அனைத்து உயிர்களிடமும் அன்பு காட்ட வேண்டும் என்னும் ஆன்ம நேயமே, உயிர்க்குலம் அனைத்தையும் உய்விக்க வல்லது. இதனை முதன் முதலில் எடுத்துச் சொன்னவர் வள்ளல் இராமலிங்கம். ஓரறிவு உயிராகிய தாவரங்கள் கோடை வெப்பத்தால் நீரில்லாமல் வாடிக் கருகிய போது 'வாடிய பயிரைக் கண்ட போதெல்லாம் வாடினேன்' என வருந்தி அழுது, ஆன்மநேய ஒருமைப்பாடு என்னும் பெருநெறியை உலகிற்குக் காட்டியவர் அவர். ஆனால் வாழும் மனிதர்களிடையே சாதிச் சண்டைகளும் மதக் கலவரங்களும் தோன்றுவதைக் கண்டு மனம் கலங்கினார். மக்களை ஒன்றுபடுத்தி மகிழச் செய்ய வேண்டிய மதங்கள், மக்களைப் பயமுறுத்தும் பேய்களாக மாறி விட்டன. இவற்றையெல்லாம் கவனித்த வடலூர் இராமலிங்க அடிகளார்,

> பெருநெறி பிடித்தொழுக வேண்டும்;
> மதமான
> பேய் பிடியாதிருக்க வேண்டும்

என இரு வரங்களை வேண்டுகிறார்.

ஞான நன்னெறியில் செல்லுவோரை வழிமறித்துத் தடுப்பது பெண்ணாசையாகும். அது தீமைகள் அனைத்தையும் உண்டாக்கும். செல்வத்தைக் கெடுக்கும். நல்லுணர்வினைத் தொலைக்கும். எனவே மெய்ஞ்ஞான நெறியில் ஒழுகுவோர் பெண்ணாசையை ஒழிக்க வேண்டும் என்னும் முடிவுக்கு வருகிறார் இராமலிங்க அடிகள். அப்போது அவருள்ளத்தில் புதிய சிந்தனை ஒன்று பளிச்சிடுகிறது. இறைவன் சில சமயங்களில் பெண்ணுருவும் வடிவமெடுத்தது உண்டே! கருணைக் கடலான கடவுள், தாயும் ஆனவராக மாறிய நிகழ்ச்சிகள் பல உள்ளனவே! அம்மையே அப்பா என்று இறைவனைப் பெண்ணுருவும் கண்ட அடியவர்கள் பலரை அனைவரும் அறிவார்களே! அப்படியிருக்க, பெண்ணாசையை ஒழித்தால் பெண் வடிவில் வரும் இறைவனை அலட்சியம் செய்ததாக ஆகிவிடுமே என்று நினைக்கிறார். எனவே, அஞ்ஞானத்தில் அழுத்துகின்ற பெண்ணாசையை ஒழிக்க வேண்டும் என்றும், அடியவர்க்கு அருள் செய்யப் பெண்ணுரு வருகின்ற இறைவனை மறக்கக் கூடாது என்றும் நினைக்கும் அவர்,

> மருவு பெண்ணாசையை மறக்க
> வேண்டும்; உனை
> மறவாதிருக்க வேண்டும்

என, மேலும் இரண்டு வரங்கள் அளிக்குமாறு வணங்குகின்றார்.

இவ்வளவு வரங்களைக் கேட்டும் இராமலிங்க வள்ளலின் ஆசை அடங்கவில்லை. மேலும் சில வரங்களை வேண்டுகின்றார்.

விரும்பிய வழிகளிலெல்லாம் போகவிடாமல், ஒருவரை நல்வழியில் செலுத்துவது அறிவு. துன்பம் வராமல் காக்கக்கூடிய கருவி

அறிவே. இறைவனைத் தெளிவதற்கு நல்லறிவு தேவை. சிறந்த அறிவு (ஞானம்) உடையவர்கள் மக்களின் மிக்கவர் ஆவர். ஞானத்தின் மிக்கார் நரரின் மிக்காரே எனத் திருமந்திரமும் கூறுகிறது. இறைவன் ஞான வடிவமானவர். அவரை உணர்வதற்குச் சிறந்த அறிவு வேண்டும். இதனை வடலூர் வள்ளல் ஒப்புக்கொள்கிறார். ஆனால் நம்முடைய அறிவால் மட்டும் நாம் அவரை அறிந்து கொள்ள முடியுமா? கடவுளின் கருணை இருந்தால் அல்லவா நாம் அவரைக் காண முடியும்? இவ்வுலகில் நாம் சம்பாதிக்கின்ற பொருட் செல்வமெல்லாம் அழியக் கூடியவை; அவை இறைவனிடம் சேர்க்கமாட்டா. கடவுளின் கருணைச் செல்வமே நிலைத்து நிற்கக் கூடியது. அக்கருணைச் செல்வமே எல்லையற்ற இன்பங்களை வழங்கக் கூடியது. இதனை நன்கு அறிந்தவர் இராமலிங்க அடிகள். ஆகவே சிறந்த அறிவும் வேண்டும்; கடவுளின் கருணையும் வேண்டும் என்பதனை,

மதிவேண்டும்; நின்கருணை
நிதி வேண்டும்

என மேலும் இரண்டு வரங்களைக் கேட்கிறார்.

இவ்வாறு பத்து வரங்களைக் கேட்ட பற்றற்ற வடலூர்த் துறவி, மேலும் ஒரு வரத்தை வேண்டுகிறார். அவர் கேட்ட வரங்களெல்லாம் தெய்வத் தொண்டினைச் சிறப்பாகச் செய்வதற்கே. சுவர் இருந்தால் தானே சித்திரம் தீட்ட முடியும்? நல்ல உடல் இருந்தால் அல்லவா இறைபணியை இடையறாது செய்ய முடியும்? இவ்வாறு நினைத்துப் பார்க்கிறார் அவர். தமிழ் மூதாட்டி ஔவையும் 'அரிதரிது மானிடராய்ப் பிறத்தல் அரிது. அதிலும் கூன் குருடு செவிடு இன்றி, நோயில்லாமல் வாழ்தல் அரிது' என்றார். ஆகவே, நோயில்லாத வாழ்க்கையைத் தமக்கு வழங்க வேண்டும் என அவர் வேண்டுகிறார்.

நோயற்ற வாழ்வு நான் வாழ
வேண்டுப

என்பது இராமலிங்க அடிகள் கேட்ட கடைசி வரம்.

வடலூர் வள்ளல் இந்த வரங்களைத் தமக்காகக் கேட்கவில்லை. நமக்காக வேண்டுகிறார். ஆம்! கடவுளை வழிபடும் ஒவ்வொருவரும் எத்தகைய வரங்களைக் கேட்க வேண்டும் என்று நமக்குக் குறிப்பு காட்டுகிறார். இந்த வரங்கள் தந்நலத்தை வளர்ப்பன அல்ல; தெய்வத் திருப்பணியைச் செய்வதற்கே பயன்படும். நினைப்பு-பேச்சு-செயல் ஆகிய அனைத்தையும் ஒருமுகப்படுத்தி, எல்லா உயிர்க்கும் இன்பம் விளைவிக்கும். எனவே, வடலூர் வள்ளல் இராமலிங்க அடிகளைப் போலவே நாமும் இறைவனிடம் வரம் வேண்டுவோம் உலக உயிர்கள் அனைத்தும் இன்பமுடன் வாழ வேண்டும் வரம் தர வேண்டும் என இறைவனைத் தொழுது வழிபடுவோமாக!

*

---




திருமலை திருப்பதி தேவஸ்தானம் கீழ்வரும் இருதிட்டங்களைப் புகுத்தியுள்ளது. இதனால், நன்கொடை மற்றும் மலிவு விலை முறையில் இந்துக்கோயில்களில் நிறுவுவதற்கான கற்சிலைகள் வடித்தனுப்பப்படும்.

நன்கொடை திட்டத்தின் கீழ் ஸ்ரீ வேங்கடேஸ்வரர் மற்றும் ஸ்ரீ பத்மாவதித்தாயார் திருவுருவக் கற்சிலைகள் இந்துக்கோயில் நிருவாகிகளுக்கு வழங்கப்படும்.

மற்றொரு திட்டத்தின் கீழ் 50 சதவிகிதம் குறைந்த விலையில் எல்லா இந்துக்கடவுளர்களின் திருவுருவக்கற்சிலைகள் வழங்கப்படும்.

இவ்விரு திட்டங்களின் கீழ் பயன் பெற விரும்புவோர், அதற்கான மனுவுடனும், செயலாட்சித்தலைவர், தி.தி. தேவஸ்தானம் (அஞ்சல் குறியீட்டு எண். 517501) என்ற முகவரிக்குத் தங்களுடைய கோயில்களின் விரிவான உருவரைப்படம், மற்றும் அவ்வட்டார உதவி ஆணையர் பதவிக்குக்குறையாத அறநிலையத்துறை அலுவலர் அல்லது .மண்டல அலுவலர்களிடமிருந்து பெறப்பட்டச் சான்றிதழுடனும் தொடர்பு கொள்ளவேண்டும். தி.தி.தேஸ்தான மேலாண்மைக் குழுவினால் அவ்வப்போது விதிக்கப்படும் நிபந்தனைகளின்படி, திருவுருவச்சிலைகள் அனுப்பி வைக்கப்படும். இது தொடர்பான எல்லா விவரங்களுக்கும் 'செயலாட்சித் தலைவர், தி. தி. தேவஸ்தானம், திருப்பதி - 517501' எனும் முகவரியுடன் ஆங்கிலத்தில் தொடர்பு கொள்ளவும்.

செயலாட்சித் தலைவர்,

தி. தி. தேவஸ்தானம், திருப்பதி.

# கருத்து மாறிய கருவூலங்கள்!

நாயைக் கண்டால் கல்லைக் காணோம்
கல்லைக் கண்டால் நாயைக்காணோம்.

மக்கள் தங்களின் பேச்சுக்களின் ஊடே இவ் வழக்கு நாளொன்றுக்கு அதிக தடவை பயன்படுத்தப்படுகிறது. ஆனால் இதன் உண்மைப் பொருளைக் காணலாம்.

சிற்பி ஒருவன் கல்லில் நாயின் சிலையைச் செதுக்குகின்றான். அதைக் காண்கின்ற அனைவருமே நாய் எவ்வளவு அழகாக இருக்கிறது என்ற கலை உணர்ச்சியோடு கண்டால் வெறும் கல்தானே என்ற உணர்வு தோன்றாது. இதையே "நாயைக் கண்டால் கல்லைக் காணோம்" என்கின்றனர்.

ஆனால் இது வெறுங் கல்தான் என்று கலை உணர்ச்சியின்றி வெற்றுப் பார்வை பார்த்தால் நாய் என்ற உருவம் தெரியாது. இதைத்தான் "கல்லைக் கண்டால் நாயைக்காணோம்" என்று கூறுகின்றனர்.

இதையே திருமூலர் மரத்தில் யானை மறைந்துள்ளதாகவும், மரம் எண்ணத்தை யானை என்ற உருவம் மறைந்து விட்டதாகவும் குறிப்பர்.

"மரத்தை மறைத்தது மாமத யானை
மரத்தில் மறைந்தது மாமத யானை"
என்பர்.

2, தலைக்கு வந்தது தலைப்பாகையோடு போனது.

இந்தப் பழமொழியும் பொருள் மாறி வழங்கப்பட்டு வருகிறது. இதன் விளக்கம் :

குருசேத்திரப் போர்க்களத்திலே கௌரவர்களுக்கும், பாண்டவர்களுக்கும் யுத்தம் நடைபெறுகின்றது. போர்க்களத்தில் முக்கிய எதிரிகளாகக் கர்ணனும் அர்ச்சுனனும் சண்டையிடுகின்றனர்.

அத்தருணம், குந்திதேவி கர்ணனிடம் நாக கணையை ஒரே தடவைதான் பார்த்திபன் மீது ஏய்த வேண்டும் என்று கேட்டுக்கொண்ட வாக்கிற்கிணங்க நாகபாசக் கணையை கர்ணன், அர்ச்சுனன் கழுத்துக்குக் குறி வைத்து எய்கிறான். இதை அறிந்த அர்ச்சுனனின் தேரோட்டியான கண்ணன் தேரை அழுத்திக் கீழே பதியச்செய்ய நாகபாசக் கணையானது கழுத்தை விட்டு, மகுடத்தைக் கொண்டு சென்றது. இதைத்தான் 'தலைக்கு வந்தது தலைப்பாகையோடு போனது' என்பர். 'தலை தப்பியது தம்பிரான் புண்ணியம்' எனும் பழமொழியும் இதனால் வந்ததே.

3. மண் குதிரையை நம்பி ஆற்றில் இறங்காதே.

இப்பழமொழியும் காலப்போக்கில் கருத்து மாறி வழங்கப்பட்டு வருகிறது. மண்ணால் செய்யப்பட்டு விளங்குகின்ற குதிரையை நம்பி ஏறி ஆற்றைக் கடக்க முயற்சி செய்யாதே என்ற பொருளில் வழங்கி வருகின்றனர்.

"மணல் திட்டு" என்பதுதான் மண் குதிரை என்றாயிற்று. "குதிர்" — மணல் திட்டு. நான்கு பக்கமும் நீரால் சூழப்பெற்ற நடுவில் மணல் திட்டு ஒன்று இருக்கும். அதில் கால் வைத்தால், கால் உள்ளே சென்றுவிடும். "மண்குதிரை" நம்பி என்பதற்குப் பதிலாக, மண் குதிரையை நம்பி என்று திரித்து வழங்கப்பட்டு வருகின்றது. ஆகவே மண்குதிரை நம்பி கால் வைக்காதே என்று சொல்ல வேண்டும்.

4. ஆசைக்கொரு பெண்ணும், ஆஸ்திக்கொரு ஆணும்.

இப்பழமொழியும் பேச்சு வழக்கில் திரிந்து பொருள்மாறி உச்சரிக்கப்படுகிறது.

பெண் ஒருத்தியின் ஆசை அளவில்லாதது. பெண்ணுக்கு நகைகள் எவ்வளவுதான் கொடுத்தாலும் அவளுடைய மனம் மட்டும் நிறைவடைவதில்லை. ஆசைக்கு அளவுகோல் பெண். இதைத்தான் ஆசைக்கு ஒரு பெண் போதும். இதுபோல், ஆஸ்திக்கு ஒரு ஆண் என்று சொல்கின்றனர். ஆஸ்தி என்றால் சொத்து. சொத்துக்கு ஒரு ஆண் என்பது, பல பிள்ளைகள் உள்ள வீட்டுக்குப்பொருந்தாது. ஆஸ்தி அல்ல அஸ்தி. அஸ்தி என்றால் ஈமச்சடங்கு. எவ்வளவுதான் செல்வாக்கும் பேரும் புகழும்

புலவர், வாரியார்க்கன்பன்
சோ. கு. குருசாமி, பி.லிட்,
இராசபாளையம்.

கொண்டு வாழ்ந்தாலும் கொள்ளி வைக்கப் பிள்ளை இல்லை என்றால் அவனுடைய மனம் சொல்லவொணா வேதனை அடையும். அதனால்தான் அஸ்திக்கு ஒரு ஆண்பிள்ளை என்றார்கள். பல பிள்ளைகள் இருந்தாலும் தீ மூட்டுவது ஒருவன்தான் என்ற கருத்து அடிப்படையில் வந்தது.

5. பித்தலாட்டம் செய்யாதே

பித்தலாட்டம் செய்யாதே என்றால் ஏமாற்றாதே என்று பொருள். பித்தளை × ஆடகம் "பித்தளாடகம்". பித்தளையை ஆடகமாகச் செய்வது. ஆடகம் என்றால் தங்கம். பித்தளையும் தங்கமும் ஒரே நிறமாக இருப்பதால் ஏமாற்றத்திற்கு உறுதுணை செய்கிறது. நிற ஒற்றுமையைப் பயன்படுத்திப் பித்தளையைத் தங்கம்

## ஒருமைப்பாட்டுக்கு ஓர் ஒப்பற்ற உதாரணம்

ஆதித்யம், அம்பிகாம், விஷ்ணும், கணநாதம், மஹேச்வரம் என்னும் ஐந்து மூர்த்தங்களை அர்ச்சிப்பதே பஞ்சாயதன பூஜை ஆகும். இந்தப் பஞ்சாயதன பூஜையானது (நம்) நாட்டில் பொதுவாகப் பலர் இல்லங்களில் தொன்றுதொட்டு நடைபெற்று வருகின்றது. இந்த வழி பாட்டு முறையில் பரமசிவன் லிங்கரூபத்திலும், மஹாவிஷ்ணு சாளக் ராமத்திலும், சூரியன் ஸ்படிகக் கல்லிலும், கணபதி சிவப்புக் கல்லி லும், அம்பிகை தங்கரேக் அமைந்த ஓர் உலோகத்திலும் அமைந்துள் ளார்கள். இவைகளுள் சிவலிங்கம் நர்மதை நதியிலும், சாளக்ராமம் நேபாளத்திலும், ஸ்படிகம் தஞ்சைக்கடுத்த வல்லத்திலும், சிவப்புக்கல் வடநாட்டிலுள்ள சோணு நதியிலும், தங்கரேக்கு அமைந்த உலோகம் இமயமலைப் பிரதேசத்திலும் கிடைக்கின்றன. ஆகையால் எந்த வீட் டில் பஞ்சாயதன பூஜை அமைந்துள்ளதோ அந்த வீடானது நமது பாரத பூமி முழுவதிலும் உள்ள எல்லாப் புண்ணிய நதிகளும், புண் ணிய தலங்களும் கொண்ட தலமாக அமைந்து விடுகிறது. இது பாரத தேசத்தின் ஒற்றுமையையும் எடுத்துக்காட்டுகிறது. ஸ்ரீ சுப்ரமண்ய வழிபாட்டை ஆறுவது வழிபாடாக இதில் சேர்த்துக்கொள்ளுவது மிக வும் உத்தமமாகும்.

— காஞ்சி காமகோடி ஸ்ரீ சங்கராச்சாரிய சுவாமிகள்.

தகவல்: ஆர். சுப்பராவ் — திருக்கோவலூர்.

என்று கூறி பொய் சொல்வதை பித்தலாடகம், பித்தலாட்டம் என்று சொல்வர்.

6. ஆலயம் தொழுவது சாலவும் நன்று.

இறை உணர்வில் மன ஒருமைப் பாடு அவசியம் என்பதை வலியுறுத் தும் பழமொழி இது. "ஆ×லயம்" ஆ என்ற உயிரானது, தன்னை மறந்து, லயித்து, இறைவனோடு ஒன்றிக்கலக் கின்ற வகையில் தொழுவது, வணங் குவதுதான் சாலவும் சிறந்தது என்ற உண்மைப் பக்திக்கு உரை கல்லாக விளங்குவது இப்பழமொழி.

7. ஆரியக் கூத்தாடினுலும்
காரியத்தில் கண்ணுயிரு.

கருமமே கண்ணுக இருக்கவேண் டும் என்ற கருத்தை விளக்கவேண்டி இப்பழமொழி வழங்கப்பட்டு வரு கிறது.

ஒரு செயலைச் செய்கின்றபோது மன ஈடுபாட்டோடு செய்யவேண்டும். அப்பொழுதுதான் எதிர்பார்த்த வெற்றி கிடைக்கும். ஆனுல் இந்தப் பழமொழியில் "ஆரியக் கூத்தாடினு லும்" என்று தவறுதலாக உச்சரிக் கப்படுகிறது. "யார் எக்கூத்தாடினு லும் நீ காரியத்தில் கண்ணுயிரு" என்ற வாக்கியம் காலப்போக்கில் திரிந்து வழங்கப்பட்டது.

8. சட்டியிலே கொக்கவித்த சண்முகம்

முருகப்பெருமான் சூரபத்மனை வதம் செய்த வரலாறு குறிக்கப்படு கின்றது.

'சட்டி' என்ருல் கந்தர் சஷ்டி. கொக்கவித்தல் - கொக்கு - மாமரம். மாமரத்தின் வடிவமாக நின்ற சூர பத்மனை அழித்த சண்முகன். இதைத் தான் அறிஞர்கள் இப்படிக் கூறு கின்ருர்கள்.

9. ஆவதும் பெண்ணுலே அழிவது பெண்ணுலே:

இந்த உலகம் பெண்மையை மைய மாக வைத்துத்தான் இயங்குகிறது. இதைத்தான்,

"எந்தக்குழந்தையும் நல்ல குழைந்தை
தான்
மண்ணில் பிறக்கையிலே - அது
நல்லவனுவதும் கெட்டவன் ஆவதும்
அன்னை வளர்ப்பதிலே."

என்கின்றனர்.

நல்ல காரியங்கள் உண்டாகிச் சிறப் படைவதும் பெண்களால்தான். தீய வைகள் அழிந்து விடுவதும் பெண் களால்தான். ஒவ்வொரு மனி தனின் முன்னேற்றத்திற்கும், தோல் விக்கும் ஒரு பெண்தான் காரணம் என்ற மேனுட்டுச் சிந்தனையாளனின் கூற்று எண்ணத்தகுந்தது.

10. காற்றுள்ளபோதே தூற்றிக்கொள்:

உடம்பிலே மூச்சுக் காற்ருன உயிர் இருக்கின்ற போது நல்ல செயல்களை செய்ய வேண்டும். தீயனவற்றை ஒதுக்கித் தள்ளவேண்டும் என்பதை இப்பழமொழி தெரிவிக்கின்றது. காற்று உள்ள போதே தீமைகளைத் தூற்றி விட்டு, நல்லனவற்றைச் சேர்த் துக் கொள் என்று சொல்கின்றனர்.

11. பிள்ளையார் பிடிக்கக் குரங்காய் முடிந்தது:

பெற்ருேர்கள் தங்களது பிள்ளை களுக்குத் திருமணம் செய்ய வேண் டும் என்ற முயற்சி எடுக்கும்போது விநாயகப் பெருமானுக்குப் பூசைகள் வைத்து அனுமதி கேட்பர். இந்தக் காரியம் சுபமாக முடிந்துவிட்டால் ஆஞ்சனேயருக்கு வழிபாடுகள் செய்து வடைமாலை சாத்துவர். எந்தக் காரி யத்தை எடுத்தாலும் இவ்விருவரும் துணையிருப்பர். இதைத் தான் 'பிள்ளை யார் பிடிக்கக் குரங்காய் முடிந்தது" என்பர்.

12. பசி வந்தால் பத்தும் பறந்து போகும்:

மனிதனை எந்நாளும் வதைத்துக் கொண்டிருப்பது பசி. அதனுல்தான் பசியினைப் பிணி என்கின்றனர். இந் தப் பசி வந்தால் பத்து வகையான

ஆசாரங்களையும் பார்க்கமாட்டான். பசிக்காகப் பனம் பழமானாலும் உண்பர். அந்தப் பத்தை ஔவையார் விளக்கிக் கூறுகின்றார்.

'மானம் குலம் கல்வி வண்மை
அறிவுடைமை
தானம் தவமுயற்சி தாளாண்மை -
தேனின்
கசிவந்த சொல்லியர்மேல் காமுறுதல்
பத்தும்
பசிவந்தி டப்போம் பறந்து.'

என்பது பாடல்.

13. சொல்லிக் கெட்டவன்-சொல்லாமல் கெட்டவன் :

விட்டுக்கெட்டவன் - விடாமல்
கெட்டவன்;
தொட்டுக் கெட்டவன்-தொடாமல்
கெட்டவன்.

இந்தப் பழமொழியில் ஆறுவகையான இதிகாச நாயகர்களை அறிமுகப்படுத்தி நம்மை நல்வழிப்படுத்துகின்றனர்.

சொல்லிக் கெட்டவன் :

அரிச்சந்திரனை பொய் சொல்ல வைப்பேன் என்று சபதம் செய்து தோல்வி கண்டு, ஏமாற்றத்தால் கெட்டவன் விசுவாமித்திரன்.

சொல்லாமல் கெட்டவன் :

எத்துன்பம் உற்றாலும், ஏதவத்தைப் பட்டாலும், இறுதிவரை பொய் பேசாது கெட்டவன் 'அரிச்சந்திரன்'.

விட்டுக்கெட்டவன் :

வந்திருப்பவர் கண்ணன், வாக்குக் கொடுக்காதே என்று சுக்ராச்சாரியார் தடுத்தும் கேளாமல் 'மூன்றடி மண் எடுத்துக் கொள்' என்று வாய் விட்டுக் கெட்டவன் பலிச்சக்ரவர்த்தி.

விடாமல் கெட்டவன் :

இறுதிவரை ஆணவத்தையும், அகங்காரத்தையும் விடாமல் கெட்டவன் துரியோதனன்.

## விண்ணப்பம்

தி. தி. தேவஸ்தான கோயில்களில் மற்றும் திருமலை ஸ்ரீ வேங்கடேஸ்வரா கோயிலில் நடைபெறும் ஆர்ஜித சேவைகளுக்காக அனுப்பப்படும் கட்டணத் தொகையினை தேசீயமாக்கப்பட்ட வங்கிகளில் மட்டுமே பெறப்பட்ட 'டிமாண்ட் டிராஃப்ட்' (D. D.) அல்லது 'பேயார்டர்' (Pay order) மூலமாக அனுப்புமாறு பக்தர்கள் கேட்டுக் கொள்ளப்படுகிறார்கள். 'செக்' (Cheque)குகளை அனுப்பவதால் கால விரயமும், நிர்வாகச் சிக்கலும் மேலாண்மைக்கு ஏற்படுகின்றது என்பதைத் தெரிவித்துக் கொள்கின்றோம்.

தொட்டுக் கெட்டவன் :

தனது தலையைத் தானே தொட்டு சாம்பலாகிப் பொசுங்கிப் போனவன் 'பத்மாசுரன்' என்ற அரக்கன்.

தொடாமல் கெட்டவன் :

இறுதி வரை தனது அதிகாரத்தின் கீழ் சீதாபிராட்டியை வைத்திருந்தும் தொடாமல் கெட்டொழிந்தவன் இராவணேஸ்வரன்.

14. போனால் வராது, வந்தால் போகாது, வந்து போகும் :

மனிதனின் வாழ்க்கையில் மேலே குறிப்பிட்ட மூன்று வகையான மாற்றங்கள் ஏற்பட வழியுண்டு. எச்சரிக்கை என்றும்கூட இதைச் சொல்லலாம்.

போனால் வராது: உயிரும்-மானமும்
வந்தால் போகாது: புகழும் - அவமானமும்.

வந்து போவது: செல்வமும்-தரித்திரமும்.

இதை எண்ணி நமது வாழ்க்கையை அமைத்துக் கொள்ள முயற்சிக்க வேண்டும்.

15. உண்டு கெட்டது, உண்ணாது கெட்டது, கேட்டுக் கெட்டது, கேளாமல் கெட்டது :

பொதுவாக மனிதர்கள் தங்களின் வாழ்க்கையில் சில நல்ல முறைகளைப் பின்பற்றுவது கிடையாது.

உண்டு கெட்டது-வயிறு ஓயாது உண்டால் வயிறு கெடும்.

உண்ணாது கெட்டது - உறவு. உறவினர்களின் வீட்டில் உண்ணவில்லை எனில் உறவில் விரிசல் ஏற்படும்.

கேட்டுக் கெட்டது - குடும்பம் - தேவையற்றவர்களின் விமர்சனங்களை குடும்பத்தில் இருப்பவர்கள் கேட்டால் குடும்பம் கெட்டுவிடும்.

கேளாமல் கெட்டது - கடன் - ஒருவருக்குக் கடன் கொடுத்தால் கேட்க வேண்டும். கேளாவிட்டால் திரும்ப வராது.

16. இருந்தடிக்கப் பறந்து போகும் :

ஒரு மனிதன் ஒழுங்காக இருந்து சோம்பல் இல்லாமல், சுறுசுறுப்பாக வேலை செய்தால் அவனைச் சுற்றியுள்ள பாபங்களான துன்பங்கள் பறந்து, இல்லாமல் சென்று விடும். இதைத்தான் இருந்தடித்தால் பறந்து போகும் என்பர்.

17. 'சேலை கட்டிய மாதரை நம்பாதே :

'கோலமா மத யானையும் நம்பலாம்' எனத் தொடங்கும் விவேக சிந்தாமணிப் பாடலின் இறுதி அடியே இப்பழமொழியாக வழங்கி வருகிறது.

சேலை கட்டிய மாதர்கள் அனைவரையும் நம்பாதே என்று அப்புலவன் சொல்லவில்லை. "சேல்+அகட்டிய+மாதர்" (சேல்) என்றால் விழி. விழிகளை அகட்டி, உருட்டி, ஆடவரை மயக்குகின்ற விலை மகளிரை நம்பாதீர்கள் என்ற பொருள் படத்தான் அவர் சொல்லியிருக்கின்றார். இதைத் தவறாக உச்சரித்துவிட்டனர் பின்பு வந்தோர். 卐

# துளசியின் மகத்துவம்

திரு. எஸ். நாராயணசுவாமி,
M.A., B.Ed.,
திருவாவடுதுறை.

உலகத்தில் எத்தனையோ தாவரங்களில் சிறப்புடையன சிலவே ஆகும். அதிலும் சில பூக்களும், பத்திரங்களும் (இலை) எம்பெருமானின் திருவடிகளை அலங்கரித்து பெருமை பெருகின்றன. அவைதான் தாமரையும், திருத்துழாய் எனப் பெறும் துளசியும் ஆகும். ஸ்ரீமன் நாராயணனின் திருவடியைத்தாமரையானது தாங்குகிறது. ஆனால் துளசியானது பாதத்தைச் சுற்றிலும் கீழும் மேலுமாக திகழ்கிறது.

வீடுகளின் முற்றத்தில் துளசி மாடம் வைத்து வணங்குவது சிறப்புடையது. அதிலும் நந்தவனத்தில் இருப்பது அதனினும் சிறப்புடையதாகும்.

விசேஷ பெருமை :

துளசி உள்ள நந்தவனமே கண்ணன் இருக்குமிடம். அதனால் நந்தன் + வனமாகும் (நந்தன்—கண்ணன்). பெரியாழ்வார், தொண்டரடிப் பொடியாழ்வார், மாலாகாரர் முதலான பக்தர்கள் துளசியினால்தான் சிறப்புற்றார்கள்.

ருக்மணிதேவி கண்ணபிரானை அடைந்ததும், கன்னிப்பெண்கள் பக்தியுடன் நித்தம் துளசியினைப் பூசித்து நல்ல கணவனை அடைவதும் இந்த துளசியினால்தான்.

துளசியின் வகைகள் :

துளசி வகைகள் எண்ணற்றவை இருப்பினும் 10 வகைத் துளசி மட்டும் வைத்திய முறைக்கு ஏற்புடையதாக அமைகிறது. துளசி கார்ப்பு மணமுள்ளது. இது ஓர் ஒப்பற்ற மூலிகை. கிருஷ்ண துளசி, ராம துளசி, செந்துளசி, கருந்துளசி, கர்ப்பூரத்துளசி முதலியன சிறந்தனவாகும். இது கஞ்சாங்கோரை இனத்தினைச் சேர்ந்தமையால் 200 வகை ஜாதிகளும் 300 வகை இனங்களும் உண்டு.

நோய் நீக்கும் துளசி :

துளசி உள்ள இடத்தில் தொற்று நோய், விஷ ஜந்துக்கள், ஈ, கொசு, சரும நோய்கள் முதலியன வராது என்பதனால், இதனை வீட்டின் முற்றத்தில் வைத்துப் போற்றினர்.

"வேம்பும் துளசியும் வீணாகா" என்ற பழமொழிக்கேற்ப துளசியுள்ள இடத்தில் வைத்தியர்க்கு வேலையில்லை. துளசி நீரினால் பதப்படுத்தப் பட்ட உயிரற்ற உடல் பல நாட்கள் அழுகாமல் இருப்பதனை "டைலர்ஸ்" என்ற விஞ்ஞானி கண்டுபிடித்துள்ளான். "ஜோன்" என்ற ரசாயனச் சக்தி உடலுக்குத் தேவைப்படுவதால் துளசியின் காற்று நம் உடலுக்குத் தேவையாகும்.

துளசி வெப்பத்தை அளிக்கும் குணமுடையதாகும். ஆகவே உடலில் உள்ள குளிர்ச்சியை சீராக அமைக்க நம்மவர்கள் துளசியினை (துளசிக்கட்டை) மாலையாக அணிகின்றனர். இதழினை உண்கின்றனர். இதனால் கபம்,வயிற்றுளைச்சல்,ஜுரம், தாகம், ஜுரமாந்தம், அரோசகமும் நீங்கும்.

பயன்படுத்தும் முறை :

துளசியினை வெள்ளிக்கிழமை, பருவங்கள் தீட்டு முதலான காலங்களில் பறிக்கக் கூடாது. எந்தப் பொருளும் ஒருநாள் கழித்தால் பர்யுஷிதமாகும் (விழுப்பு). ஆனால் துளசிக்கும், வில்வத்திற்கும் இதிலிருந்து விலக்காகும். (தோஷம் கிடையாது). துளசியினை நீரினால் கழுவக் கூடாது என்பதனை சேஷ கருடபுராணம் கூறுகிறது. துளசி பூசையினால் பெருமாள் (நாராயணன்) சந்தோஷப்படுதலும் பராசக்தி சந்தோஷப்படுதலும் நோக்கத்தக்கது. விநாயகர் பூசையில் துளசியினை சேர்த்துக் கொள்ளக்கூடாதென "பிரம்மவைவர்த்த புராணம் கூறுகிறது". நகம் படாமல் துளசியினை எடுத்து பயன்படுத்த வேண்டும்.

ஆழ்வார் கண்ட துளசி :

சங்கிற்கும், சக்கரத்திற்கும் குறிப்பிட்ட இடத்தினை எம்பெருமான் நியமித்துள்ளார். ஆனால் துளசியினை தன் அங்கமுழுவதும் பூண்டுள்ளார். ஸ்ரீ ஸ்வாமிதேசிகன் சிலேடையாக கூறும்போது துளசியினால்தான் ஹரி தத்துவம் (பச்சை நிறம்) வெளிப்படும் என்கிறார்.

"தெய்வத் தண்ணந்துழாய்த் தாராயினும் தழையாயினும் தண் கொம்பதாயினும் கீழ்வேராயினும் நின்ற மண்ணாயினும் கொண்டு விகமினே" என்றும்,

"தன் முடிவொன்றில்லாத தண்
துழாய் மாலையனை"

என்றும் பலவாறாக நாலாயிரப்பிரபந்தத்தில் கூறப்பட்டுள்ளன.

பெயர்க் காரணம் :

விநாயகனை "க்ஷிப்ரபிரசாதன்" என அழைப்பர். அதுபோல உடனே பலன் தரும் மருந்தும் இதுவே. துள+சி=துளசி என்ற சொல்லுக்கு ஒப்பற்ற செடி எனப் பொருள்படும். கீதையில் பகவான் ஸ்ரீ கிருஷ்ணன் "பத்ரம் புஷ்பம் பலம் தோயம்" என்ற பிரியமான பொருள்களில் துளசியே சிறப்புடையது என்கிறார். துளசி வனத்தி

(40ம் பக்கம் பார்க்க)

# அரியும் அலங்காரமும்

இந்திய நாட்டின் ஆதி சமயங்கள் இரண்டு. அவை சைவமும் வைணவமும் ஆகும். வரலாற்றுக்கு முற்பட்ட அநாதி காலத்திலேயே இந்தச் சமயங்கள் நம் நாட்டில் வேரூன்றி நிலைத்து விட்டன. இவற்றை 'இந்து சமயங்கள்' என்று கூறுகிறோம்.

மக்களை நன்னெறியில் ஒரு குழுவாக வாழச் செய்வதுதான் சமயத்தின் நோக்கமாகும். சைவமும் வைணவமும் இவ்வகையில் தொன்று தொட்டு மிகச் சிறப்பாகத் தம் கடமையைச் செய்து வருகின்றன. இடைக்காலத்தில் ஒரு சிலரால் சைவ வைணவ சமயங்களுக்கிடையே வேற்றுமைகள் கற்பிக்கப்பட்டன; சமயப் பூசல்களுக்கு இடமளிக்கப் பட்டது. இந்நிலையில், இந்து சமயங்களுக்கு எதிராகப் பௌத்தமும் சமணமும் நம் நாட்டில் தோன்றின. அரசர்களின் பேராதரவால் அவை மிகுந்த வலிமையோடு பரவத் தொடங்கின. அப்போது சைவ வைணவர்கள் தம் தவறு உணர்ந்தனர். புதிது புதிதாகத் தோன்றும் சமயங்களால் மக்கள் சிறுசிறு பிரிவுகளாகச் சிதறுண்டு போகக் கூடும் என அஞ்சினர். எனவே சைவ வைணவ பேதம் மறந்து இந்து சமயம் என்னும் ஓரணியில் திரண்டனர். அதனுல் புதிய சமயங்கள் மதிப்பிழந்தன. பிற்காலத்தில் முகம்மதியரும் ஐரோப்பியரும் இந்திய அரசியலில் நுழைந்தனர். அரசியல் பலத்தைப் பயன்படுத்தியும், வறுமைக்கு இரங்குதல் என்ற பெயராலும் இஸ்லாம், கிறிஸ்தவம் என்னும் புறச் சமயங்களைப் புகுத்தினர். பெருங்காற்று வீசும்போதும், கரைபுரண்டு ஓடும் வெள்ளம் வரும் போதும் ஆற்றங் கரையில் முளைத்த நாணல் வளைந்து கொடுத்து அவை ஓய்ந்த பிறகு தலை நிமிர்ந்து நிற்பது போலச் சோதனைகள் அனைத்தையும் வென்று இந்து சமயம் இன்று தலை நிமிர்ந்து நிற்கிறது.

'தீமைகளும் நன்மைகளுக்காகவே' என்பது சான்றோர்களின் அனுபவ மொழி. சோதனைகள்தாம் சாதனைகளுக்கு வழிகாட்டுகின்றன. இந்து சமயத்திற்கு எதிராகத் தோன்றிய இந்தச் சோதனைகளே நம்மிடையே சைவர் - வைணவர் என்ற வேறுபாட்டை விரட்டியது. சைவ சமயக் குரவர்களும் வைணவ ஆச்சாரியர்களும் அரியும் சிவனும் ஒன்று என்னும் கொள்கையை வலியுறுத்தினர். அவர்களுள் அருணகிரி நாதர் குறிப்பிடத் தக்கவர்.

'சைவ சமயக் குரவர்கள் நால்வருக்குப் பின்வந்த ஐந்தாவது குரவர்'-எனச் சிவஞானிகளால் போற்றப் படுபவர் அருணகிரியார். சைவத் தமிழ்ப் பெருங்கடவுளான முருகப் பெருமானின் திருவருளைப் பெற்றவர் இவர். பதினைந்தாம் நூற்றுண்டில் தமிழ் நாட்டில் சந்தப்பாக்களால் கந்தப் பெருமானைப் பாடிச் சைவத்தை வளர்த்தவர் இவர். திருப்புகழ், திருவகுப்பு, வேல் மயில் விருத்தம், கந்தர் அநுபூதி, கந்தர் அந்தாதி, கந்தர் அலங்காரம் என ஆறுமுகக் கடவுளுக்கு ஆறு நூல்களைப் பாடிய இவரது சைவத் திருவுள்ளத்திலே, வைணவத் தனிப்பெரும் தெய்வமாகிய திருமாலையும் போற்றும் சமயப் பெருந்தன்மை நிறைந்திருந்தது. கந்தர் அலங்காரம் என்னும் நூலில் அரியின் ஆற்றல்களை உரிய வகையில் இவர் எடுத்துக்கூறுவதைக் கொண்டு இவரது சமயப் பொதுமையை உணரலாம்.

முருகக் கடவுளின் அன்னையார் உமா மகேஸ்வரி. இவர் திருமாலுக்குத் தங்கை ஆவார். இதனுல் முருகப் பெருமான் திருமாலின் மருகர் ஆகிறுர். எனவே முருகக் கடவுளைக் குறிப்பிடும்போது திருமாலைப் பற்றியும் இவர் சொல்ல வேண்டி நேரிட்டது என்று சிலர் நினைக்கலாம். அது உண்மையானுல் "திருமால் மருகா!" என்று உறவு முறையை மட்டும் கூறி, திருமாலின் பெருமைகளை அருணகிரியார் சொல்லாமல் இருந்திருப்பார். அவ்வாறில்லாமல், கந்தரலங்காரத்தில் ஆங்காங்கே திருமாலின் பல அவதாரச் சிறப்புக்களையும் அருட் செயல்களையும் விளக்கமாகக் கூறுவதால், இவர் சைவத்தையும் வைணவத்தையும் சமமாகக் கருதினுர் என உணர முடிகிறது.

புலவர். பெ. கிருஷ்ணராஜன், எம்.ஏ.,
சேலம்-6.

முருகப் பெருமானின் திருவடிப் பெருமையைத் தெரிவிக்க வேண்டும் என்பது அருணகிரியாரின் எண்ணம். ஆனுல் பாட்டைப் பாடும்பொழுது திருமாலின் திருவடிச் சிறப்பே முன் நிற்கிறது. வாமனர் அவதாரத்தில் மாவலி என்னும் அசுர வேந்தனிடம் சென்று மூன்றடி நிலம் கேட்டு மூவுலகையும் அளந்த திருவடிப் பெருமையையே முதலில் பாடுகிறுர்.

மாவலிபால் மூவடிகேட்டு அன்று
மூதண்ட கூட முகடுமுட்டச்
சேவடி நீட்டும் பெருமான் (பா. 15)

என்று திருமாலின் பெருமையைச் சொல்லி, அவரது மருகராகிய முருகனின் திருவடி மயில் வாகனத்தின் மீதும், தேவர் தலையிலும், எனது பாக்களின் ஏட்டிலும் பட்டது என்று கூறுகிறுர்.

# தி. தி. தேவஸ்தான சமய நூல் வெளியீடுகள்

## தமிழ்

| | ரூ. காசு. |
|---|---|
| 1. ஸ்ரீ வேங்கடேச சுப்ரபாதம் (ஸ்தோத்ரம், ப்ரபத்தி, மங்களா சாஸனங்களுடன்) | 0—50 |
| 2. ஏழுமலை யாத்திரை — திரு. டி. கே. நாராயணன் | 0—75 |
| 3. அன்னமய்யா ஓர் அறிமுகம் டாக்டர். பொன். சௌரிராஜன் டாக்டர். கே. சர்வோத்தமன் | 1—00 |
| 4. பகவத் சந்தேசம். (தமிழாக்கம்) டாக்டர். பொன் சௌரிராஜன் | 0—50 |
| 5. இந்து சமயக் கையேடு (தமிழாக்கம்) அ. நடராஜன் | 1—50 |
| 6. நித்யாநுஸந்தானம் (வடகலை) | 4—00 |
| நித்யாநுஸந்தானம் (தென்கலை) | 4—50 |
| 8. சித்திரத்திருப்பாவை — பி. ஸ்ரீ. | 8—25 |
| 9. கண்ணன் பேசுகிறான் —நஜன் | 0—50 |

## சம்ஸ்கிருதம்

| | |
|---|---|
| 1. ஸ்ரீ வேங்கடேஸ்வரா அஷ்டோத்ர ஸகஸ்ரநாமம் | 0—62 |
| 2. அலங்கார ஸங்ரஹம் —சி. கே. பாஸ்கரராவ் | 16—00 |
| 3. கடோபநிஷத் —டாக்டர். கே. சி. வரதாசாரியார் —டாக்டர். டி. தாதாசாரியார் | 15—00 |
| 4. க்ரியாதிகாரா — தொகுத்தவர் : டாக்டர். எஸ். பி. ரகுநாதாசாரியா | 25—00 |
| 5. மார்க்கண்டேய ஸம்ஹிதா | 18—00 |
| 6. ப்ரஸ்னோபநிஷத் | 11—00 |
| 7. ஸ்ரீ வேங்கடேஸ்வர சுப்ரபாதம் | 0—12 |
| 8. சீதாராமாஞ்சநேயம் டாக்டர். டி. அர்க்கசோமயாஜி | 50—00 |
| 9. தத்வ சாங்க்யானம் —திரு. ஆர். ராமமூர்த்தி சர்மா | 2—00 |
| 10. பிரம்மசூத்ர பாஷ்யம்-தொகுதி - 1 | 30—00 |

திரு. —ஆர். ராமமூர்த்தி சர்மா

மேற்படி நூல்களுக்கான தொகையை வங்கி டி. டி. அல்லது எம். ஒ. மூலமாக அனுப்பி பெற்றுக்கொள்ளலாம். வி. பி. பி. மூலமாக நூல்கள் அனுப்புதல் இயலாது. நூல்களுக்கு "உதவி செயலாட்சித் தலைவர்(எஸ்), நூல் வெளியீட்டுப் பிரிவு, தி.தி.தேவஸ்தானம், திருப்பதி" எனும் முகவரிக்கு ஆங்கிலத்தில் தொடர்பு கொள்ளவும்.

'பிறனில் விழையாமையே பேராண்மை' என்பது திருக்குறள். பத்துத் தலைகளையும் இருபது கைகளையும் உடைய இராவணன், தன் உடல் வலிமையே பெரு வலிமை என்று நினைத்தான். அதனால், மாற்றான் மனைவியை மனத்தால் நினைப்பதும் பாவம் என்னும் அறத்தை மறந்து, இராமபிரானின் மனைவியாகிய சீதா பிராட்டியைக் கவர்ந்து சிறை வைத்தான். மறத்தை அழித்து உலகில் அறத்தை நிலைநாட்ட முடிவு செய்த இராமன், பெரும்படையுடன் இராவணனின் இலங்கை மாநகரை முற்றுகையிட்டார். இராவணனைக் களத்தில் நேருக்கு நேர் எதிர்த்துப் போரிட்டார். இருபது கைகளை உடைய இராவணனின் தலைகள் பத்தும் அறுபட்டு விழுமாறு இராமபிரான் அம்புகளை எய்தார்.

கைதான் இருபது உடையான்
தலை பத்தும் கத்தரிக்க
எய்தான்............(பா. 22)

என்று காகுத்தன் பெருமையைக் கந்தரலங்காரம் கூறுகிறது.

அமிழ்தம் உண்டவர்க்கு அழிவே இல்லை. அமிழ்தம் எங்கே கிடைக்கும்? திருப்பாற் கடலைக் கடைந்தால் அமிழ்தம் வருமெனத் தேவர்கள் அறிந்தனர். பாற்கடலைக் கடைய மத்து வேண்டுமே? மந்தர மலையை மத்தாக வைப்பது என்று முடிவு செய்யப்பட்டது. தேவர்களால் மந்தர மலையை அசைக்கக்கூட முடியவில்லை. எனவே அரக்கர்களும் துணைக்குச் சேர்த்துக் கொள்ளப்பட்டனர். தேவர்களும் அரக்கர்களும் மந்தர மலையைப் பெயர்த்து மத்தாக நட்டனர். பாம்பரசாகிய வாசுகி, அம்மலையைச் சுழலவைக்கும் கயிறாகச் சுற்றப்பட்டது. அனைவரும் பாற்கடலைக் கடையத் தொடங்கினர். நிலைத்து நின்று சுழல்வதற்கு ஆதாரமில்லாததால் மந்தர மலை மூழ்கத் தொடங்கியது. அப்போது திருமால் மிகப் பெரிய ஆமை (கூர்மம்) அவதாரம் எடுத்து மூழ்கும் மலையை,

மூக்கின் நுனியால் தூக்கி நிறுத்தினர். அதன்பின் பாற்கடலைக் கடைய அமிழ்தம் வந்தது என்பது புராணம். தேவர்கள் அமிழ்தம் பெறக் காரணமான கூர்மாவதாரம் எடுத்த நாராயணனை,

...வெற்புநட்டு உரக
பதித்தாம்பு வாங்கி நின்று
அம்பரம் பம்பரம் பட்டுழல
மதித்தான்...........(பா-39)

என்று கந்தரலங்காரம் பாராட்டுகிறது. மந்தரமலை பம்பரம் போல் சுழல ஆமை வடிவில் ஆதாரமாக நின்ற அழகனை அருணகிரியின் திருவுள்ளம் இவ்வாறு மதித்துப்போற்றுகிறது.

பிருந்தாவனத்தின் அருகில் இருப்பது காளிந்தி என்னும் நதி. இந்நதியின் மடுவில் காளிங்கன் என்னும் விஷப் பாம்பு வசித்து வந்தது. இதன் கொடிய விஷத்தால் மடுவின் நீர் முழுவதும் விஷமாகிவிட்டது. கண்ணனும் பிற ஆயர் சிறுவர்களும் காளிந்தி நதிக்கரையில் மாடு மேய்ப்பது வழக்கம். மடுவின் நீர் விஷமானதை அறியாத ஆயர் சிறுவர்கள் சிலர், ஒரு சமயம் அந்நீரைக் குடித்தனர். சிறிது நேரத்தில் அவர்கள் அனைவரும் துடிதுடித்து இறந்தனர். உடனிருந்த கண்ணன் உண்மையை உணர்ந்தான். இறந்தவர்களை உயிருடன் எழுமாறு அருள் புரிந்தான். அதன்பின் காளிங்கனை ஒழிக்க மடுவில் பாய்ந்தான். காளிங்கன் சீற்றத்தோடு கண்ணனைச் சுற்றிக் கொண்டது. கண்ணன் வானமளாவிய பேருருவத்துடன், பாம்பின் வாலை ஒரு கையில் பிடித்துக் கொண்டு அதன் தலைமீது நின்று கூத்தாடுகிறான். கண்ணன் தீராத விளையாட்டுப் பிள்ளை அல்லவா? காளிங்க நர்த்தனமும் அவனுக்கு ஒரு விளையாட்டு ஆயிற்று.

பெரும் பாம்பில் நின்று
நடிக்கும் பிரான் (பா-50)

என்று கண்ணனின் அருள் விளையாட்டை நமக்கு நினைவுபடுத்துகிறார் அருணகிரியார்.

சிறு குழந்தைகள் தெருவில் விளையாடும் போது மண்ணைத் தின்பது வழக்கம். குழந்தையாக இருக்கும் போது கண்ணனின் வாழ்க்கையிலும் இது நடந்தது. ஒரு சமயம் அவன் மண்ணை எடுத்துத் தின்பதைப் பலராமன் பார்த்துவிட்டான். தாய் யசோதையிடம் அதைச் சொல்லிவிட்டான். கண்ணன் இருந்த இடத்திற்கு யசோதை சென்றாள். 'மண்ணை அள்ளித் தின்றாயா?' என்று அதட்டினாள். 'இல்லை' என்று சொல்லி, வாயைத் திறந்து காட்டினான் கண்ணன். உலகம் அனைத்தும் அவன் வாயினுள் இருப்பதைக் கண்டாள் யசோதை. இந்தக் காட்சி அருணகிரியின் நெஞ்சில் நிழலாடுகிறது. கண்ணனை 'அகிலமுண்ட மால்' என்று பாடுகிறார். திருமாலுக்கு விருப்பமானது துளசி மாலை. அதுவே அவருக்கு அழகைத் தருவது என்று நினைக்கிறார் அருணகிரி. இவ்விரண்டு செய்திகளையும் ஒன்றாக இணைத்து,

அகிலமுண்ட மாலுக்கு
அணிகலம் தண்ணந் துழாய்(பா-62)

என்று கந்தரலங்காரத்தில், சுந்தரனை அலங்கரிக்கத் துளசி மாலை சூட்டுங்கள் என்னும் குறிப்பை நமக்குத் தருகிறார். பச்சை வண்ணமுடைய பகவானுக்குப் பசுமை நிறத் துளசி மிகப் பொருத்தமே!

இந்திரத்துய்மனன் என்பவன் சந்திரகுலத்து அரசன். அகத்திய முனிவரின் சாபத்தால் இவன் கஜேந்திரனாகப் பிறந்தான். கஜேந்திரன் தனது சாபம் நீங்குதற் பொருட்டு நாள் தோறும் குளத்தில் நீராடி தாமரை மலர் ஒன்றைத் துதிக்கையால் பறித்து எடுத்துச் சென்று பரமனின் திருவடியில் வைத்து வணங்கி வந்தது. அக்குளத்தில் முதலை ஒன்று வாழ்ந்து வந்தது. ஒரு நாள் கஜேந்திரன் நீராடிவிட்டு மலரைப் பறித்த போது, அந்த முதலை யானையின் காலைப் பற்றிக் கொண்டது. யானைக்கு நிலத்தில் வலிமை. முதலைக்கு நீரில் வலிமை. எனவே நெடுங்காலம் முதலையுடன் போராடியும் யானையால் தப்ப முடியவில்லை. 'பரமனுக்கு எடுத்த மலர் பயனற்றுப் போகிறதே' என்று வருந்திய கஜேந்திரன் 'ஆதி மூலமே!' என்று அழைத்தது. அடியவர் துயர் தீர்க்கும் அரி பெருமாள் அப்போதே தன் சக்கரப் படையை அனுப்பி முதலையைக் கொன்றதோடு, கஜேந்திரனுக்குக் காட்சியும் அளித்து அருள் செய்தார். வா என்று அழைக்கு முன்னே வந்து துயர் தீர்த்த கோவிந்தனை,

கரி கூப்பிட்ட நாள்
கராப்படக் கொன்று, அக்
கரிபோற்ற நின்ற கடவுள் (பா-108)

என்று அருணகிரியாரும் போற்றி வணங்குகிறார்.

கந்தரலங்காரம் முருகக் கடவுளின் பெருமைகளை எடுத்துக் கூற எழுந்த நூல். ஆனால் இந்நூலின் இடையிடையே வேங்கடக் கடவுளின் ஓங்கு புகழ் உணர்த்தப்படுகிறது. அருணகிரி நாதர் தமது மற்றைய நூல்களில் சொல்லியிருப்பதைவிட, பெருமாளின் பெருமைகளைக் கந்தரலங்காரத்தில் மிகுதியாகக் காட்டியிருக்கிறார். காரணம் என்னவாக இருக்கும்?

'அரி ஓர் அலங்காரப் பிரியர். அவரது பெருமையைச் சொல்லக் கந்தர் அலங்காரமே ஏற்றது' என அருணகிரியின் திருவுள்ளம் எண்ணியிருக்குமோ?

⁂



# திருமலையில் தங்கு வசதிகள்

திருமலையில் உள்ள தி. தி. தேவஸ்தானத்தாரின் தங்கு வசதிகளின் வாடகைக் கட்டணங்கள் கீழ்வருமாறு 1-5-87 முதல் உயர்த்தப்பட்டுள்ளன.

| குடில்கள் வகை | வாடகை விவரங்கள் (நாள் ஒன்றிற்கு) |
|---|---|
| சிறப்பு வகை குடில்கள் | ரூ. 100/- |
| டி. பி. உட்குடில்கள் | 70/- |
| **டி. பி. வெளிக்குடில்கள், III-வது வரிசையும் சேர்த்து** | |
| 'ஏ' பகுதி (வெந்நீர் வசதி உள்ளது) | 20/- |
| 'பி' பகுதி (வெந்நீர் வசதி இல்லாதது) | 12/- |
| வி. வி. சி. மற்றும் எம். பி. சி. 31 மற்றும் 26 | 70/- |
| எம். பி. சி. 'ஏ' பகுதி (வெந்நீர் வசதியுடன்) | 20/- |
| எம். பி. சி. 'பி' பகுதி (வெந்நீர் வசதி இல்லாதது) | 12/- |
| **டி. பி. அறைத்தொகுதிகள் மற்றும் ஏ. டி. சி. அறைத் தொகுதிகள்** | |
| வெந்நீர் வசதியுடன் | 15/- |
| வெந்நீர் வசதி இல்லாதது | 10/- |
| **ஏ. டி. சி. கீழ்த்தளம்** | |
| 'ஏ' பகுதி | 30/- |
| 'பி' பகுதி | 30/- |
| **எஸ். எம். சி.; எஸ். என். சி.; ஏ. என். சி.; ஜி. என். சி.; எச். வி. சி.** | |
| 'ஏ' பகுதி வெந்நீர் வசதி இல்லாதது | 12/- |
| 'பி' பகுதி வெந்நீர் வசதி இல்லாதது | 12/- |
| எச். வி. டி. சி. அறைத்தொகுதிகள் (ஒவ்வொன்றும்) வெந்நீர் வசதியுடன் | 25/- |
| எச். வி. டி. சி. அறைத்தொகுதிகள் (ஒவ்வொன்றும்) வெந்நீர் வசதி இல்லாதது | 12/- |
| பெரிய அறைத்தொகுதியுடன் கூடிய எச். வி. சி. விருந்தினர் விடுதி — வெந்நீர் வசதியுடன் | 50/- |
| சிறிய அறைத்தொகுதியுடன் கூடிய எச். வி. சி. விருந்தினர் விடுதி வெந்நீர் வசதி இல்லாதது | 25/- |
| எஸ். வி. விருந்தினர் விடுதி பெரிய அறைத்தொகுதி (வெந்நீர் வசதியுடன்) | 70/- |
| எஸ். வி. விருந்தினர் விடுதி மூலை அறைத்தொகுதி | 60/- |
| எஸ். வி. விருந்தினர் விடுதி வேறு அறைத்தொகுதி | 50/- |
| **என். ஜி. விருந்தினர் விடுதி I & II** | |
| மூலை அறைத்தொகுதி | 60/- |
| மற்றைய அறைத்தொகுதிகள் | 50/- |
| எச். ஆர். ஜி. முழு குடில் | 250/- |
| **எஸ். வி. விருந்தினர் விடுதி** | |
| பெரிய அறைத்தொகுதி எண்; 9 மற்றும் சிறிய அறைத்தொகுதி எண்: 7 மற்றும் 8 | 750/- |
| பெரிய அறைத்தொகுதி எண்: 1 மற்றும் சிறிய அறைத்தொகுதி எண்: 6 | 750/- |
| சிறிய அறைத்தொகுதிகள் எண்: 2, 3, 4, 5, (ஒவ்வொன்றும்) | 250/- |
| ஸ்ரீநிகேதன் (ஒவ்வொரு அறைத்தொகுதி) (எஸ். பி. நகர் விருந்தினர் விடுதி எண்: 4) | 250/- |
| இந்திரா விருந்தினர் விடுதி (ஏ. சி.) ஒவ்வொரு அறைத்தொகுதி (எஸ். பி. நகர் விருந்தினர் விடுதி எண்: 2) | 250/- |
| பாலகுடீரம் (ஏ.சி.) ஒவ்வொரு அறைத்தொகுதி (எஸ். பி. நகர் விருந்தினர் விடுதி எண்: 3) | 250/- |
| கோகுலம் (ஏ. சி.) | 500/- |
| டி. பி. சி. மற்றும் ஏ. டி. சி. குடில்களில் முதல்தளம் முழுப்பகுதி | 60/- |
| அரைப்பகுதி | 30/- |
| எஸ். என். விருந்தினர் விடுதி (அறைத்தொகுதி ஒன்றிற்கு) | 50/- |
| ராம் பகீச்சா விருந்தினர் விடுதி (அறைத்தொகுதி ஒன்றிற்கு) | 50/- |
| **திருமணக்கூடங்கள்** | |
| எஸ். எம். சி. 260, 266, 267, 272. ஒவ்வொரு குடிலுக்கும் நாள் ஒன்றிற்கு | 75/- |
| ரூயா 248 | 100/- |
| கோகினேனி 226 | 100/- |
| சிதம்பரம் செட்டியார் குடில் | 125/- |
| ஏ. டி. சி. 99 | 100/- |
| டி. பி. சி. 71, 136, 152 | 75/- |
| பாலாஜி திருமண மண்டபம் | 500/- |
| சீதாராம திருமண மண்டம் | 1000/- |

# கால்வண்ணம்



**திருமுருக கிருபானந்தவாரியார்**



தொகுப்பும் படமும்: *சசி - சென்னை-71.*

"இராமா! இவளைப் பெண் என்று எண்ணற்க... உடனே கொல்" என்று தாடகையைச் சுட்டிக் காட்டி இராமரிடம் விசுவாமித்திரர் கூறினார்.

தாடகை, மலைப் பாம்புகளைக் கை வளைகளாக அணிந்திருப்பாள். கொடுமையான சூலத்தைக் கையில் ஏந்திக் கொண்டிருப்பாள். ஆயிரம் நற்குணங்களை உலோபகுணம் என்ற ஒன்று மறைத்து அழித்து விடும். அதுபோல் கொடிய அரக்கியாகிய தாடகை ஒருத்தியே இந்த வளமையான மருத வனத்தை அழித்துப் பாலைவன மாக்கிவிட்டாள்.

"பெண்ணைக் கொல்லுதல் பெரும் பழி" என்று தாடகையைப் பார்த்து இராமர் எண்ணினார்.

"இவள் செய்யாதத் தீமையே இல்லை. தவம் செய்து செய்து வற்றிய மேனியையுடைய எங்களைக் கோதென்று உண்ணா திருக்கிறாள். புல்லைக் களைந்தாலன்றி நெல் விளையாது. கொடியவளை அழித்தல் கொற்றவனது கடமை. இவளைக் கொன்று உலகுக்கு நன்மையைச் செய்வாய்" என்றார் விசுவாமித்திரர்.

தாடகை, இராமன்மேல் சூலப் படையை ஏவினாள். இராமா வாளினால் அவளது நாசியையும், செவிகளையும் அறுத்தார்.

நிறை மொழி மாந்தர் ஆணையில் கிளந்த மறைமொழியே யன்ன கணையைத் தாடகையின் மேல் ஏவினார் இராமபிரான். அதுவயிரக்கல்போன்ற

கடிய மார்பகங்களைத் துளைத்து, கல்லாப் புல்லர்க்கு நல்லோர் நவின்ற நற்பொருளென ஊடுருவிச் சென்றது.

தாடகை - வீழ்ந்து மாண்டாள். தேவர்கள் பூமழை பொழிந்து வாழ்த்தினர். மூவரும் மிதிலையை நாடிப் புறப்பட்டனர். சோணை நதிக்கரை சோலையின் வரலாற்றை விவரித்தார் கௌசிகர்.

அமிர்தத்துடன் பிறந்தவள் அகலிகை. இவளுடைய பேரழகைக் கண்டு இமையவர்களும் விரும்பினார்கள். "இரண்டு முகங்களை உடைய பசுவை எவர் முதலில் வலம் வருகின்றாரோ அவர்க்கு அகலிகையைத் தருவேன்" என்றார் பிரம்ம தேவர்.

இதைக் கேட்டதும் இமயவர்கள் திகைத்தார்கள்.

பிரம்ம தேவர், "எவர் உலகத்தை முதலாவதாக வலம் வருகிறார்களோ- அவர்க்கு அகலிகை" என்றார்.

'ஐராவதம்' யானைமீது அமர்ந்து உலகை வலம்வர இந்திரன் புறப்பட்டான். ஆட்டுக்கடாமீது அக்னி தேவனும், எருமைக் கடாமீது இயம தர்மனும், மான்மீது வாயு தேவனும், மற்ற தேவர்கள் அவரவர்களுக்குரிய வாகனங்களில் அமர்ந்து உலகை வலம் வரத் தொடங்கினர்.

நிறை கருவுடைய காராம் பசு ஒன்றுடன் கௌதம முனிவரது ஆச்சிரமத்திற்கு நாரதமுனிவர் வந்தார். அப்பொழுது பசுவானது கன்று ஈனத் தொடங்கியது. பசுவின் பின்புறம் கன்றின் சிரம் புறப்பட்டது. உடனே, கௌதமரை கன்று ஈனும் பசுவை வலம்வரச் செய்தார். பின், பிரம்ம தேவரிடம் அவரை நாரதர் அழைத்துச் சென்று, "இரு முகங்களுடைய பசுவை வலம் வந்தார். அகலிகையை இவருக்கே கொடுங்கள்" என்றார். அகலிகை கௌதமர் திருமணம் முடிந்தது.

உலகை வலம் வந்த இந்திரன் நடந்ததை அறிந்து ஏமாற்றத்துக் குள்ளானான்.

அகலிகையின்பால் ஏற்பட்ட ஆசை தணியவில்லை இந்திரனுக்கு.

ஒரு நாள் நள்ளிரவு கௌதமருடைய தவப்பள்ளிக்கு வந்தான் இந்திரன். சேவல் உருவெடுத்துக் கூவினான். கௌதமர் நீராட நதித்துறைக்குச் சென்றார். கௌதமர் திருவுருவில் இந்திரன் அகலிகையைத் தழுவி மருவினான். அவள், தன் கணவனார் என்றே கருதி விட்டாள்.

இந்திரனின் இழி செயலைக் கண்டு கடும் சீற்றம் கொண்ட கௌதமர் இந்திரனைப் பார்த்து சீற்றம் அடைந்து "உன் உடம்பெல்லாம் நீ விரும்பியது ஆயிரமாக உண்டாகக் கடவது" என்று சபித்தார். இந்திரன் உடம்பெல்லாம் பகக்குறி பெற்று நாணமுற்று, பழியும் பாவமும் எய்திச் சென்றான்.

"நீ கல்லாகக் கிடப்பாய்" என்று அகலிகையை நோக்கிச் சபித்தார். அவள் கணவனாரைத் தொழுது அழுது "எத்தனைக் காலம் இருக்க வேண்டும்?" என்று நயந்து கேட்டாள். கௌதமர், "தசரத இராமனுடைய அடிப்பொடிப் பட்டால் சாபம் அகலும்" என்று அருளினார்.

பெண்கள் கற்பு கல்லைப் போல் திண்மையாக இருக்க வேண்டும். பாரம் அதிகமானால் இரும்பு வளையும்; கல் பிளக்கும். கணவனார் வடிவில் வந்த இந்திரனை அகலிகை அறியாது மருவினாள். பின் கணவனார் எய்தியதும் தன்னை மருவியது அன்னியன் என்று அறிந்தவுடனே 'அவள்' உயிர்த் துறந்திருத்தல் வேண்டும்.

அவ்வாறு உயிர் துறக்காமலிருந்த படியால் "கல்லைப் போன்ற உறுதி கற்பில் இல்லை. ஆனபடியால் கல்லாக இரு" என்று கௌதமர் சாபமிட்டார்.

"நிறைமொழி மாந்தர் ஆணையிற் கிளந்த
மறைமொழி தானே மந்திரம் என்ப"



முருகவேள் சிவனார்க்கு பிரணவப் பொருளைச் செப்பும் காட்சி. சுவாமிமலை
திரு. எஸ். ஜி. சேஷகிரி - கோவை.

கௌதமர் சொல் உடனே அவளைக் கல்லாக மாற்றியது. தான் செய்த பாவத்தாலும் அவரின் கோபத்தாலும் நீண்ட கல்லாகக் கிடந்தாள்.

அக்கல்லின்மீது இராமருடைய திருவடியில் படிந்திருந்த அடிப் பொடிபட்டவுடனே சாபம், பாபம் இரண்டும் நீங்கப் பெற்றாள்.

"கண்ட கல்மிசைக் காகுத்தன் கழல்
துகள் கதுவ
மண்ட பேதைமை மயக்கற வேறுபட்
டுருவம்
கொண்டு மெய்யுணர் பவன்கழல்
கூடிய தொப்பப்
பண்டை வண்ணமாய் நின்றனள்..."

இராமருடைய திருவடித்துகள் பட்டவுடன் அகலிகை கௌதமரைத் திருமணம் செய்து கொள்வதற்கு முன் இருந்த கன்னிப் பருவத்தை அடைந்தாள்.

இராமருடைய திருவடிப் பொடி அகலிகையின் சாபத்தை நீக்கியதால் இராமருடைய "திருவடி" மக்களுக்கு உய்வு தரும். இக்கருத்தை உணர்த் தும் பொருட்டு,

"உய்வண்ணம் அன்றி மற்றோர்
துயர் வண்ணம் உறுவதுண்டோ?"
என்றனர்.

தாடகையும் கருமை நிறமுடையவள், இராமரும் கருமை நிறமுடையவர். அவள் வண்டி மை போன்ற நிறமும், இவர் இருண்ட மழை முகில் போன்ற வடிவமும் உடையவர் என்று கம்பர் நயமாகக் கூறுகிறார்.

"கை வண்ணம் அங்கு கண்டேன்
கால் வண்ணம் இங்குக் கண்டேன்"

கை செய்தது நிக்கிரகம். கால் செய்தது அநுக்கிரகம். தாடகைக்கு மறக் கருணையும், அகலிகைக்கு அறக் கருணையும் செய்து அருளினார்.

"கால் வண்ணம் இங்குக் கண்டேன்"

இராம சரிதையில் கால் பகுதி மட்டுமே இங்குக் கண்டேன். அரை வண்ணம், முக்கால் வண்ணம், முழு வண்ணம் எல்லாம் பின்னே காண்பேன்-என்பது ஒரு பொருள்.

"கால் வண்ணம் இங்குக் கண்டேன்"

திருவடியின் வண்ணத்தை இங்குப் பார்த்தேன். மெய் வண்ணம் தர்ப்ப சயனத்திலும், கண் வண்ணம் அநுமசந்திப்பிலும், சொல் வண்ணம் விபீடணன் அடைக்கலத்திலும், வில் வண்ணம் மூல பலப்போரிலும் காண்பேன் என்று குறிப்பிடுகின்றார் - இது மற்றொரு பொருள்.

"கால் வண்ணம் இங்குக் கண்டேன்"

கால் வண்ணம் என்பது பிராண வாயு.

'மூலாதாரத்தில் மூண்டெழு கனலை
காலாலெழுப்பும் கருத்தறி வித்தும்'

என்பது விநாயகர் அகவல். பிராணயாமம் செய்து யோகப்பயிற்சி உள்ளவர்கள் இரும்பைப் பொன்னாகவும், கல்லைப் பெண்ணாகவும் செய்ய வல்லார்கள். ஆதலால் கால் வண்ணம்-காற்றின் வண்ணத்தைக் கண்டேன் என்பது மற்றொரு பொருள்.

"கால் வண்ணம் இங்குக் கண்டேன்"

மனிதனுடைய வாழ்வில் கால் பங்கு-பிரம்மசர்யம், அரைப்பங்கு-கிரஹஸ்தம், முக்கால் பங்கு-வானப்பிரஸ்தம், முழுப் பங்கு-சந்நியாசம். இராமர் பிரம்மசாரி. அகலிகையைப் பார்த்தவுடன் அவளை அன்னையாக நினைத்து "இந்த அம்மையார் யார்?" என்று கேட்டார். பெண்ணைக் கண்டு அவர் மனம் சலனம் அடையவில்லை. அதனால் "உன் பிரம்மசர்ய வண்ணத்தை இங்குக் கண்டேன்" என்று கூறுகின்றார்-இது இன்னுமொரு பொருள்.

"அஞ்சன வண்ணத்தான் தன்
அடித்துகள் கதுவா முன்னம்
வஞ்சிபோல் இடையாண் முன்னை
வண்ணத்தள் ஆகி நின்றாள்
நெஞ்சினால் பிழைப்பிலாளை
நீ அழைத் திடுக என்னக்
கஞ்சமா முனிவன் அன்ன
முனிவனும் கருத்துட்
கொண்டான்.



காளையார் கோவிலின் அழகிய தெப்பக்குளம். சிவகங்கை.
திரு. ஆர். கிருஷ்ணமூர்த்தி - கோவை.

# பஞ்சபுராணம் பாடும் மரபு

இன்னிசையைக் கேட்டு மனம் உருகாதவர்கள் இல்லையென்றே சொல்லலாம். அதற்கு இறைவனும் விதிவிலக்கல்ல. எத்தனையோ அநுபூதிமான்கள் பாமாலை பாடியே இறைவனைப் பணிந்து நல்வாழ்வு பெற்றனரென்பதை அறிய முடிகிறது. தமிழகத்தைப் பொறுத்த மட்டில் இசையும் கலைகளும் கோவில் களிலேயே வளர்க்கப்பட்டன. கோவிலையடுத்து இசைப் பள்ளிகள் அமைந்திருந்ததாகக் கூறும் கல்வெட்டுச் சான்றுகளும் உண்டு.

நாளும் இன்னிசையால் இறைவனைப் புகழ்ந்து பாடும் மரபு தொன்று தொட்டே தமிழகத்தில் இருந்து வந்ததாகத் தெரிகிறது. இந்த மரபின் அடிப்படையில்தான் தமிழகக் கோவில்களில் பஞ்சபுராணம் பாடும் வழக்கம் தோன்றியிருக்க வேண்டும்.

திரு. கி. அரங்கசாமி, எம்.ஏ.,
பட்டாம்பி.

பஞ்சபுராணம் பாடும் மரபு யாரால் - எப்பொழுது தொடங்கி வைக்கப்பட்டதென்பதற்குப் போதுமான சான்றுகள் நமக்குக் கிடைக்கவில்லை. ஆனால் ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்னதாகவே தமிழகத்தில் இம்மரபு நடைமுறையில் இருந்ததென்பதைக் காட்ட போதுமான சான்றுகள் உள்ளன. குறிப்பாகச் சோழர்காலக் கல்வெட்டுகள் இச் செய்திக்கு வேண்டுமான ஆதாரங்களைத் தருபவையாய் அமைந்துள்ளன.

சேக்கிழார் பெரியபுராணம் இயற்றிய பின்னர் பன்னிரு திருமுறைப் பகுப்பு நடந்த பிறகு திருமுறைகள் அனைத்தையும் இறைவன் திருமுன்பாகப் பாடப்பட்டதாக சோழர் காலக் கல்வெட்டொன்றின் உதவியால் அறிய முடிகிறது. இங்ஙனம் பாடுவதற்காக நிபந்தங்கள் அளிக்கப் பட்டதாகவும் தெரிய வருகிறது.

காலப்போக்கில் இவைகளைப் பாடுவதற்கு அதிக நேரம் ஆனதால் அவற்றைச் சுருக்கிப் பாடும் எண்ணம் தலைதூக்கியிருக்க வேண்டும். அதன்படி திருமுறைக்கொரு பாடல் வீதம் பாடும் மரபு தோன்றியது. மேலும் சில காலங்களுக்குப் பின்னர் இம்மரபும் சில மாறுதலுக்குட்பட்டு பஞ்சபுராணம் பாடும் மரபு தோன்றியிருக்க வேண்டும்.

பஞ்சபுராணம் பாடுதல் என்பது தேவாரம், திருவாசகம், திருவிசைப்பா, திருப்பல்லாண்டு, பெரிய புராணம் என்ற ஐந்திலும் ஒரு பாடல் வீதம் பாடுவதாகும். சோழர்களின் எழுச்சிக்குப் பின் இந்த வழக்கு தமிழகக் கோவில் களில் பின்பற்றப்பட்டு வருகிறது.

பஞ்சபுராணத்துள் தேவாரம், திருவாசகம், திருவிசைப்பா, திருப் பல்லாண்டு போன்றவை எவ்வாறு அடங்கும் என்று வினாத் தொடுப்போரும் இல்லாமல் இல்லை. ஒருவேளை இவைகளின் பழமையையும், பெருமையையும் கருத்திற்கொண்டும் இறுதியில் அமைந்துள்ள பெரியபுராணம் என்ற பெயரில் புராணம் என்ற சொல் இருப்பது கருதியும் இவ்வைந்து நூல்களையும் ஒன்றாகப் பஞ்சபுராணம் என்றே அழைத்திருந்தனர் என்று கொள்ள வேண்டும். பஞ்சபுராணம் பாடும் மரபுக்கு திருப்பதியம் விண்ணப்பித்தல் என்ற பெயரும் இருந்ததாகத் தெரிகிறது.

பஞ்சபுராணமும், இதில் அடங்காத வேறு திருமுறைப் பாடல்கள் பலவும் இறைவன் திருமுன்பாகப் பாடுவதற்குப் பெரிதும் ஊக்கம் அளித்தவன் முதலாம் இராசராசனாவான் (கி. பி. 985 — 1014). இவன் காலத்தில் சிவன் கோவில் களில் திருமுன்னர் பூசை வேளைகளில் தேவாரத் திருப்பதிகங்கள், திருவெம்பாவை போன்றவற்றையும், அகோபில மடம் போன்ற வைணவத் திருப்பதிகளில் நாலாயிரத் திவ்ய பிரபந்தமும் பாடுவதற்கு ஏற்பாடு செய்யப்பட்டிருந்ததாகத் தெரிகிறது.

இராசராசன் தஞ்சைப் பெரிய கோயிலில் திருமுறைப் பாடல்களைப் பாடுவதற்கு இசைவாணர்கள் நாற்பத்தெண்மரை நியமித்திருந்தானென்ற செய்தி கல்வெட்டுகளில் காணப்படுகிறது. இதிலிருந்து இராசராசனுக்கு முன்பு பஞ்சபுராணம் பாடும் மரபு இருந்திருந்து,அது வழக்கிழக்கும் தறுவாயில் இவன் தேவாரத் திருப்பதிகங்களைக் கண்டெடுத்து அவற்றைப் பாடும் மரபுக்கு புத்துயிர் கொடுத்திருப்பான் என்று எண்ணத் தோன்றுகிறது.

திருமுறைகளையும், நாலாயிரத் திவ்ய பிரபந்தங்களையும் 11வது நூற்றுண்டில் முறையே நம்பியாண்டார் நம்பிகளும், நாதமுனிகளும் தொகுத்ததற்கு முன்னமே கோவில் களில் இவை பாடப்பட்டிருந்தன வென்று கல்வெட்டுச் செய்திகள் மூலம் அறியக்கிடப்பதாக ஜே. எம். சோமசுந்தரம்பிள்ளை அவர்கள் 'சோழற்கோயிற்பணிகள்' என்ற நூலில் கூறியிருப்பது மேற்சொன்ன செய்திக்கு அரண் செய்வதாகும்.

(32.ம் பக்கம் பார்க்க)



# சிறந்த நறுமணம்

ப்ருஹதாரண்ய உபநிஷத்(2-4-10) வேதங்களை எம்பெருமானுடைய மூச்சுக் காற்று என்று கூறுகிறது. சாந்தோக்ய உபநிஷத் (3-14-2) எம்பெருமான் எல்லா உயர்ந்தமணங்களுக்கும் இருப்பிடம் என்று உரைக்கிறது. இவ்விதம் மணங்களின் இருப்பிடமான எம்பெருமானின் மூச்சுக் காற்றான வேதத்திற்கு மணமில்லாமல் எப்படி இருக்கும்? ஆகவே வேதத்தின் மணம் என்று கூறுவது கவிமரபாகி விட்டது. உதாரணமாக ஸ்வாமி தேசிகன் கோபால விம்சதியில் (ச்லோ 3) கூறுகிறார். "குழந்தை கண்ணன் அழும்போது மேலுதடும் கீழுதடும் துடிக்கின்றன. அவனது அழுகையில் வேதத்தின் மணம் வீசுகிறது. அழும்போது கண்ணீர் பெருகுவதால் திருக்கண்கள் கலங்குகின்றன. அழுதுகொண்டிருக்கும் போதே அடிக்கடிகுழந்தைக்குப் புன்சிரிப்பு வந்து விடுகிறது. இக்குழந்தை வடிவுகொண்ட கண்ணன் வஞ்சனைத் தாயாய் வந்த பூதனையின் பாலோடு அவள் உயிரையும் பருகினான். அப்படிப்பட்ட கண்ணனைப் பரமபுருஷனாக அறிகிறேன்". தமிழ் வேதமாகிய திருவாய் மொழிக்கும் நம்மாழ்வார் எப்போதும் அணிந்து கொண்டிருந்த மகிழம் பூமாலையின் வாஸனையுள்ளதாகக் கூறுவது வழக்கம். உதாரணமாக இராமாநுஜ நூற்றந்தாதியில் (60) "திருவாய் மொழியின் மணந்தரும் இன்னிசை மன்னுமிடந்தொறும்" என்பது காண்க. இராமாயண கீர்த்தனம் செய்யப்படுமிடத்திலெல்லாம் சிறிய திருவடி இருப்பதுபோல, திருவாய் மொழியின் பரிமணம் மிக்க இசை எங்கெங்கு நிகழ்கின்றதோ அங்கெல்லாம் புகுந்து நிற்பவர் எம்பெருமானார் என்று இப்பாசுரம் கூறுகிறது.

பகவானிடமிருந்தே எல்லா மணங்களும் உண்டாகின்றன என்ற காரணத்தினால் எம்பெருமானை உபநிஷத் सर्वगन्धः என்று ஓதியது. மேலும் பெருமானது திருவுந்தி, உலகங்களாக ஆகின்றதுகளைப்பெற்ற தாமரைப் பூவினால் மிக்க மணங்கொண்டு திகழ்கிறது. தவிரவும், அவனது திரு மார்பில் எப்பொழுதும் விளங்கும் பெரிய பிராட்டியின் திருமுலைத்தடங்களில் அணிந்துள்ள திவ்ய சந்தனத்தால் அவனது திருமார்பு முழுவதும் மணம் மிகுதியால் வீசுகின்றது. வடமொழி வேதங்கள், ஆழ்வார்கள் கண்ட தமிழ் மறைகள் ஆகிய அனைத்தும் அவனுடைய திருவடிகளின் பெருமையையே பேசி நிற்பதால் அவன் திருவடிகள் இரண்டிலும் அவ்விரு மறைகளின் திவ்ய பரிமளம் நிறைந்து நிற்கின்றது. இங்ஙனம் திருமேனி முழுவதும் ஒப்பற்ற நறுமணம் வீசப்பெற்றிருந்தும் அதனால் திருப்தி பெறாத எம்பெருமான் அந்தப் பரிமளங்களைக் காட்டிலும் உயர்ந்த பரிமளத்தை பெற விரும்பி அதற்காக ஆண்டாளின் திருமுடியில் சூடிக்களைந்த மாலையைத் தலையால் வணங்கி ஏற்றுத் தரித்து அற்புத மணம் நிறைந்து திகழ்கிறான். இவ்விதம் ஸ்வாமிதேசிகன் கோதாஸ்துதியில் அருள்கிறார்.

கருப்பூரம் நாறுமோ கமலப்பூ நாறுமோ
திருப்பவளச் செவ்வாய்தான் தித்தித்திருக்குமோ
மருப்பொசித்த மாதவன்தன் வாய்ச்சுவையும் நாற்றமும்
விருப்புற்றுக் கேட்கின்றேன் சொல்லாழிவெண் சங்கே.

என்று திருச்சங்கத்தை வினவுகின்றாள். "கம்பீரமாய் வெளுத்திரா நின்ற ஸ்ரீபாஞ்சஜந்யாழ்வானே! குவலயாபீட யானையின் கொம்பை முறித்த கண்ண பிரானுடைய திருவதரத்தினுடைய நலத்தையும் பரிமளத்தையும் ஆசையோடு கேட்கிறேன். அப்பெருமானுடைய அழகிய பவளம் போன்ற சிவந்த திருவதரமானது பச்சைக் கற்பூரம் போல் வாசனை வீசுமோ? அல்லது தாமரைப் பூப்போல வாசனை வீசுமோ? மதுரமான ரஸத்தை உடைத்தாயிருக்குமோ? இன்னபடி யிருக்குமென்று

திரு. லா. ஸ்ரீநிவாஸன்—புது தில்லி.

# ஸ்ரீராமரும் கும்பகர்ணனும்

ஸ்ரீ ராமருக்கும் கும்பகர்ணனுக்கும் யுத்தம் நடந்தபொழுது கும்பகர்ணன் இராமரைப் பார்த்து "இராமா! இந்தப்போரில் நான் இறப்பதும் நீ வெற்றி பெறுவதும் உறுதி. அப்படி இருக்கும்பொழுது நமக்குப் பின்னுல் வரக்கூடிய சந்ததியினர் உன்னைப் பற்றியும் இராவணனைப் பற்றியும் பெருமையாகப் பேசுவார்களே தவிர, என்னைப் பற்றி நினைக்கக்கூட வகையில்லாமல் போய் விடும்". என்று கூறி வருந்தினன். அதற்கு ராமர், "வருந்தாதே கும்பகர்ணு, எங்களைப் பற்றி பேசும் இடங்களில் எல்லாம் உன்னைப் பற்றியும் பத்துப்பேராவது நினைக்கும்படி செய்து விடுகிறேன்" என்ருராம்.

அதனுல்தான் ராமாயண கதாகாலட்சேபம் நடக்கும் இடங்களிலெல்லாம் குறைந்தது பத்துப் பேராவது கும்பகர்ணனை நினைத்து (தூங்கிக்) கொண்டிருப்பார்கள்!

தகவல் : திருமதி கமலா மாரியப்பன் — கோயம்புத்தூர்.

எனக்குச் சொல்" என்றபடி. அநுபவ ஸமயத்தில் வாஸனையே முற்பட்டிருக்கும். ஆயினும் கூறுமிடத்தில் ரஸம் முற்பட்டிருக்கிறது. ஏனெனில் ஆண்டாளின் முக்கிய நோக்கம் செவ்வாயின் இன்சுவையைப் பற்றியது என்று உரைப்பர்.

புஷ்பத்தையும் அதன் பரிமளத்தையும் உபமானமாகக்கொண்டு ஸ்ரீபராசரபட்டர் ஸ்ரீகுண ரத்நகோசத்தில் तव स्पृशति என்ற ச்லோகத்தில் பிராட்டியின் மேன்மையை உபபாதிக்கிருர். ச்லோகத்தின் கருத்தாவது: मङ्गलं भगवान् विष्णुः मङ्गलं मधुसूदनः। मङ्गलं पुण्डरीकाक्षो मङ्गलं गरुडध्वजः॥ என்றும் 'पवित्राणां पवित्रं यो मङ्गलानां च मङ्गलं என்னும் பல ப்ரமாணங்கள் எம்பெருமானை மங்களம் என்னும் சப்தத்திஞல் குறிக்கின்றன. ஆனுல் அது பிராட்டியின் ஸம்பந்தத்திஞலேயாம். கூரத்தாழ்வான் ஸ்ரீஸ்வதத்தில் ऐश्वर्यं यदेव पुंसि என்ற ச்லோகத்தில், "பிராட்டியே! ஸமஸ்த சேதநர்களிடத்திலும் யாதொரு ஐச்வர்யமுள்ளதோ, அவயவசோபையாகிற ஸௌந்தர்யமென்ன, ஸமுதாய சோபையாகிற லாவண்யமென்ன, இவற்றின் உருவம் யாதொன்றுள்ளதோ, லோகத்தில் மங்களகரமென்று பேர் பெற்றது. யாதொன்று 'நல்லது' என்று சொல்லப்படுகிறதோ, அந்த ஐச்வர்யம் முதலியவையெல்லாம் உமது ஆணைக்கு அடங்கியதாகவே இருக்கின்றன. அக்காரணத்திஞலேயே அவையெல்லாம் ஸ்ரீ என்னும் சொல்லாலேயோ அல்லது ஸ்ரீமத் (ஸ்ரீயை உடையது) என்கிற சொல்லாலேயோ ப்ரஸித்தியை அடைகின்றது" என்று அருள்கிருர்.

பிராட்டி மங்கள ஸ்வரூபை என்றதாயிற்று.அப்படிப்பட்டவளின்சேர்த்தியால்தான் எம்பெருமானுக்கும் மங்களபதவாச்யத்வம் உண்டாகிறது. இவள் ஸம்பந்தத்தால் எம்பெருமான் மங்களமானுல், அவள் எதனுல் மங்களமாகிருள் என்ற கேள்வி எழும். அது ஒரு ஸம்பந்தத்திஞல் ஏற்பட்டதல்ல, இயற்கையானது என்பதை ஒரு த்ருஷ்டாந்தத்தின் மூலம் முதலிக்கிருர் ஸ்ரீபராசரபட்டர். உலகில் புஷ்பத்திற்குச் சிறப்பு சொல்லும் போது அது பரிமளத்திஞல் உண்டானது என்பர். அதன்மேல் பரிமளம் எதனுல் உயர்ந்தது என்ற கேள்வி உண்டாவதுமில்லை. அதற்கு ஒரு காரணம் சொல்வதுமில்லை. ஏனெனில் பரிமளம் சிறந்தது என்பது இயற்கையாகவே உலகம் இசைந்த விஷயம். புஷ்பத்திற்கு ஏற்றம் சொல்லும் போது பரிமளத்தையிட்டுச் சொல்லவேணும். ஆனுல் பரிமளத்திற்கு ஏற்றம் ஸ்வதஸ்ஸித்தம் எப்படியோ, அப்படியே எம்பெருமானுக்கு ஏற்றம்பிராட்டியினுல். ஆனுல் பிராட்டிக்கு ஏற்றம் இயற்கை என்றபடி.

ஸ்வாமி தேசிகன் பரமபத ஸோபானத்தில் விவேகபர்வத்தில் பின்வருமாறு அருளியுள்ளார்.

அடற்புள்ளாகிலும் அந்தணர்மாட்டி
லும் இன்னமுதக்
கடற்பள்ளிதன்னிலும், காவிரி
யுள்ளம் உகந்தபிரான்
இடைப்பிள்ளையாகி உரைத்தது
உரைக்கும் எதிவரனுர்
மடைப்பள்ளி வந்த மணம்
எங்கள் வார்த்தையுள் மன்னியதே

இதன் பொருள்:பராக்ரத்தையுடைய பக்ஷிராஜனுகிய கருடனிடத்தில் காட்டிலும், ப்ராஹ்மணர்களுடைய தனமாகிய வேதத்தைக் காட்டிலும், போக்யமான அம்ருதம் உண்டான க்ஷீரஸமுத்ரமாகிற படுக்கையைக் காட்டிலும், திருக்காவிரியின் மத்ய ப்ரதேசமாகிற ஸ்ரீரங்க க்ஷேத்ரத்தை ப்ரீதி பூர்வமாக அங்கீகரித்த உபகாரனை எம்பெருமான் கோபகுமாரனை ஸ்ரீகிருஷ்ணனுக அவதரித்து அருளிச் செய்த ஸ்ரீகீதைக்கு வ்யாக்யானம் செய்தருளின ஸ்ரீ பாஷ்யகாரருடைய மடைப்பள்ளியில் வந்த வாஸனை (மடைப்பள்ளி ஆச்சான் வழியாக உபதேச பரம்பரையில் வந்த ஸம்ப்ரதாய அர்த்தம்)எங்கள் வார்த்தைக்குள் ஸ்திரமாக இருக்கிறது.

எம்பெருமானுருக்கு பிக்ஷையில் ஒருவர் விஷம் கலக்க, அவர் அதிலிருந்து உண்ணுமலிருக்க, அதையறிந்த அவர் ஆசார்யரான திருக்கோட்டியூர் நம்பி ப்ரணதார்த்திஹரர் என்ற கிடாம்பி ஆச்சானை பாஷ்யகாரருக்கு பிக்ஷ ஸாதிக்கும்படி நியமித்

தார் என்ற விருத்தாந்தம் இங்கு அறியத்தக்கது. ஆச்சானுக்கு வேதாந்தோதயனர் என்றும் ப்ரணதார்த்திஹரர் என்றும் ப்ரஸித்த திருநாமங்கள் இருக்கச் செய்தே ஆசார்ய கைங்கர்யத்தையே ஸ்வரூப ப்ராப்தமாகக் கொண்டு யதிராஜமஹாநஸிகர் என்பதையே தமக்குத் திருநாமமாக அங்கீகரித்தமையினுல் இவருடைய ஆசார்யபக்தி விசேஷமாகத் தெரிய வருகிறது. "எவனுக்கு தெய்வத்தினிடத்தில் உயர்ந்த பக்தி இருக்கிறதோ, எப்படி தெய்வத்தினிடத்திலோ அப்படியே ஆசார்யனிடத்திலும் உயர்ந்த பக்தி இருக்கிறதோ, அப்படிப்பட்ட மஹாத்மாவிற்கே உபதேசிக்கப்பட்ட அர்த்தங்கள் ப்ரகாசிக்கின்றன" என்று ச்ருதி கூறுகிறது. அதன்படியே ஸ்ரீபாஷ்யகாரரால் உபதேசிக்கப்பட்ட ரஹஸ்யார்த்தங்களெல்லாம் இவருக்கு யதாவத்தாக ப்ரகாசித்துக் கொண்டிருந்தன. 'மடைப்பள்ளி ஆச்சான்' என்று கூருமல், 'மடைப்பள்ளி' என்று மட்டும் அருளிச் செய்திருப்பதனுல் இவருடைய ஆசார்ய பாரதந்த்ரயத்தின் பராகாஷ்டை காட்டப்பட்டதாகிறது. இங்கு மடைப்பள்ளியிலிருந்து வருகிற பக்வமான அன்னங்களின் வாசனை என்றும் ஒரு அர்த்தம் த்வனிக்கிறது. எவ்விதம் உண்ணக்கடவதான உயர்ந்த பண்டங்களை சேமித்துத் திருமடைப்பள்ளியில் வைத்து அவை வருக்கும் வழங்குகின்றனரோ, அவ்விதம் கற்றறிந்து அநுபவிக்க வேண்டிய வேதாந்தத்தின் ரஹஸ்யார்த்தங்களை எல்லாம் ஸ்ரீ பாஷ்யகாரர் கிடாம்பி ஆச்சானுக்கு உபதேசிக்க, அவை அவர் மூலமாக உலகுக்கு வழங்கப்பட்டு, அப்புள்ளார் மூலமாகத் தமக்குக் கிடைத்துள்ளன என்பதை "மடைப்பள்ளி வந்த மணம் எங்கள் வார்த்தையுள் மன்னியதே" என்பதனுல் ஸ்வாமிதேசிகன் காட்டுகிருர்.

கீதைக்குப் பல பாஷ்யங்கள் உள்ளன. ஆனுல் அவை குல்லாய்க்குத் தகுந்தவாறு தலையைச் சரிப்படுத்துகிற முறையில் உள்ளன. எம்பெருமானுருடைய பாஷ்யம் ஒன்றே தலைக்குத் தகுந்தவாறு குல்லாய் அமைக்கும் நிலையிலுள்ளது. ஸ்ரீ பாஷ்யகாரர் ஒருவரே ஸ்ரீ க்ருஷ்ணனுடைய திருவுள்ளத்தை அநுஸரித்தவர். ஆதலால் எம்பெருமானுடைய திருவுள்ளத்தை உள்ளபடியே அறிந்த ஸ்ரீ பாஷ்யகாரருடைய திருவுள்ளத்தில் இருந்தவைகளாயும், சில காலம் அவருக்கு அந்தரங்க சுச்ருஷாதிகள் செய்ததினுல் அவரால் அநுக்ரஹிக்கப்பட்ட ஆச்சான் மூலமாக வந்தவைகளாயும் இருக்கிற ஸம்ப்ரதாயத்தில் நிரூபிக்கப்பட்ட அர்த்தங்களையே நாம் உபதேசிக்கிறோம் என்று ஸ்வாமிதேசிகன் விளக்குகிருர்.

இம்மடைப்பள்ளியையும் அதன் மணத்தைப் பற்றியும் ஸ்வாமிதேசிகன் பலவிடங்களில் சொல்லிப் பெருமிதம் கொள்கிருர். சரணுகதி தீபிகை முதல் ச்லோகத்தில் **मान्यं यतीश्वरमहानससंप्रदायम्** என்றும், ந்யாஸ திலகத்தில் (ச்லோ 9) **यो महानसिको महान् यतिपतेः** என்றும், ஸ்ரீமத் ரஹஸ்ய த்ரய ஸாரத்தில் நிகமதாதிகாரத்தில் **इति यतिराज महानसपरिमलपरिवाह-वासितां पिबत** என்றும் அருளியிருப்பது காண்க.

மேலும் ஸ்வாமி தேசிகன் தமது வாக்கின் மணத்தைப் பலவிதமாக வர்ணிக்கிருர். வைராக்ய பஞ்சகத்தில் (ச்லோ 2) "மாலைக் காலத்தில் மலர்ந்த மல்லிகை மலர் போல் மணம் வீசுகிற நம் வாக்கைக் கொண்டு ஓர் அரசனிடமும் ஒரு துரும்பைக்கூட யாசிக்கமாட்டோம்" என்று அருளியுள்ளார். ஸ்ரீமத் ரஹஸ்யத்ரயஸாரத்தில் புருஷார்த்த காஷ்ட அதிகாரத்தில் **नाथे न तृण-मन्यत्** என்ற ச்லோகத்தில் "எமக்கு ஸ்வாமியான எம்பெருமானிடத்திலும்கூட புல்லைப்போல் அற்பமான இம்மைச் செல்வத்தையோ, இந்திராதிபதங்களையோ, ப்ரஹ்மபதத்தையோ, கைவல்யத்தையோ, மோக்ஷத்தையோ, அவ்வெம்பெருமானது திருவுந்தியாகிய தாமரைப் பொய்கையில் தோன்றிய தாமரையால் விரும்பத்தக்க மணத்தை வீசுகின்ற எமது வாக்கினுல் யாசிக்க மாட்டோம்" என்று அருள்கிருர். "என்னுவிலின் கவியாறொருவர்க்கும் கொடுக்கிலேன்" என்று நம்மாழ்வார் அருளியபடியே மானிடரைக் கவிபாட இசையாது, பதிவிரதை நறுமணமுள்ள புஷ்பங்களைத் தனது கணவனின் உகப்பிற்காகவே அணிந்து கொள்வதுபோல் தாமும் தமது மணம்மிக்க வாக்கை எம்பெருமானைத் துதிப்பதற்கே உபயோகப்படுவதைத் தெரிவித்துள்ளார் ஸ்வாமிதேசிகன்.

பூதத்தாழ்வார் இரண்டாம் திருவந்தாதியில் பின்வரும் பாசுரம் அருளியுள்ளார்.

> வரைச் சந்தனக் குழம்பும் வான்
> கலனும் பட்டும்
> விரைப்பொலிந்த வெண் மல்லிகை
> யும்—நிரைத்துக்கொண்டு
> ஆதிக்கண்நின்ற அறிவனடியிணையே
> ஓதிப்பணிவதுறும்.

இதன் பொருள்: மலையினின்றும் உண்டான சந்தனத்தின் குழம்பையும், சிறந்த அணிகலன்களையும், பட்டுப் பீதாம்பரங்களையும், பரிமளம் மிகுந்த வெளுத்த மல்லிகை மாலைகளையும் சேகரித்துக்கொண்டு ஆதி காலத்தில் ஸகல ஜகத் காரண பூதனுய் நின்ற ஸர்வஞ்ஞான பெருமானுடைய இரு திருவடிகளையே வாயாரத் துதித்து தலையார வணங்குவது சேதநருடைய ஸ்வரூபத்துக்குச் சேரும். அவனுடைய திருமேனியின் ஸௌகுமார்யத்தைப் பார்த்தால் சாதாரணமான சந்தனக் குழம்பை அவனுக்கு இடலாகாது. மிக உயர்ந்த சந்தன மரங்கள் வளரும் சந்தனகிரியிலே உண்டான சந்தனத்தின் குழம்பே இட வேண்டும். **सुगन्धमेतद्रा-जार्हं रुचिरं रुचिरानने ।**

(28-ம் பக்கம் பார்க்க)

# சித்திரத் திருப்பாவை



## 13. கண்ணா! கார்முகில் வண்ணா!

"திருவே கருவான திருமகளே! சித்திரத்தில் எழுதிய செந்தாமரைப் புஷ்பம் போலவும், துள்ளி வரும் புள்ளிமானைப்போன்றும் ஒத்த கண்ணழகு பெற்றவளே! எம் தோழியே!

கொத்திக்குதறிக் கொன்றிட, கொக்கரித்து, கொக்கின் பெரு உருவம் பெற்று வந்த பகாசுரனுடைய வாயைக் கிழித்துப் பிளந்து எறிந்தவனும், அறம் பிறழ்ந்து நீதியைத் துறந்து, தீமையே நெறியாகக் கொண்ட—கொடிய அரக்கர்களுக்கெல்லாம் தலைவனாகத் திகழ்ந்த இராவணனுடைய தலைகளைக் கொய்தவனுமாகிய பெருமானது புகழை, கீர்த்தியை, பெருமையை மனமார—உளமார பாடிக் கொண்டே, அனைத்து நங்கையர்களும் ஸ்ரீ கண்ணபிரானின் எதிரே பாவை நோன்பு நோற்குமிடத்திற்கு வந்து சேர்ந்தனர்.

கீழ்த்திசை தொடு வானத்தே சுக்கிரன் பார்வைக்குப் புலப்படும்படி உதயமாக, மேற்றிசை தொடுவானத்தே அதுவரையில் கண்ணுக்குப் புலப்பட்டுக் கொண்டிருந்த வியாழனும் அஸ்தமிக்கலாயிற்று. பறவைகளும், இரை தேடுவதற்காகக் கூவிக்கொண்டே புறப்பட்டுவிட்டன எம்பாவையே! எம்தோழியே! நீ இந்தப் பொன்னான நன்னாளில், "கண்ணா! கார்முகில் வண்ணா!" என்று தனியே மனதிற்குள் தியானிக்கின்ற, போற்றுகின்ற கள்ளத்தனத்தை விட்டு விட்டு, எங்களோடு கலந்து, உடலும் உள்ளமும் குளிரக் குளிர தண்ணீரைக் குடைந்து குடைந்து, அமிழ்ந்து அமிழ்ந்து நீராடாமல் பஞ்சணையில் இப்படி படுத்து இன்னும் உறங்கலாமோ? துயிலெழுந்து எம்முடன் எங்களுடன் வருக" என்று அழைக்கின்றாள் ஸ்ரீகோதை.

புள்ளின்வாய் கீண்டானைப் பொல்லா அரக்கனை,
கிள்ளிக் களைந்தானைக் கீர்த்திமை பாடிப்போய்,
பிள்ளைகள் எல்லாரும் பாவைக் களம்புக்கார்,
வெள்ளி எழுந்து, வியாழம் உறங்கிற்று;
புள்ளும் சிலம்பின காண்; போதரிக் கண்ணினாய்
குள்ளக் குளிரக் குடைந்து நீராடாதே,
பள்ளிக் கிடத்தியோ? பாவாய்! நீ நன்னாளால்
கள்ளம் தவிர்ந்து கலந்தேலோ ரெம்பாவாய்!

நீதி - நேர்மை - தர்மம் - என்றென்றும் நிலைபெற்றிட-அவற்றிலிருந்து பிறழ்ந்து, பல கொடுமைகள் புரிந்து வந்த அரக்கர்களை, ஒரு சோலையின் ஆரோக்கியத்திற்காக, பூச்சிபட்ட இலைகளை கிள்ளி எறியப்படுவது போல, பகவான் வதம் செய்து அழித்தார்.

இம்மார்கழி நீராட்டம், கோகுலத்தில் ஆயர்குல மங்கையர்கள், ஸ்ரீ கண்ணபிரானை தங்கள் நாயகனாகப் பெறவும், நாடு வளமும் நலமும் பெறவேண்டியும், மார்கழி மாதத்தில் தொடங்கப் பெற்று அம்மாதத்துப் பௌர்ணமியோடு முடிக்கப் பெறும் விரதமே 'பாவை நோன்பு' ஆகும். மார்கழி மாதத்தே முழுமதி நிறைந்த நாளான பௌர்ணமியன்று அதிகாலையில் அத்திரு நீராடல் தொடங்குகிறது. கீழ்வானம் வெளுப்பதற்கு முன்பே, கோழி கூவுவதற்கும் முன்பே, கன்னிப் பாவையர் நீராடி நோன்பினை முடித்துக் கொள்வர். ஆகவே மார்கழித் திங்கள் மதி நிறைந்த நன்னாளின் நீராடலுக்காக வைகறைக்கு முன்பே துயிலெழுந்து, வானில் நட்சத்திர கிரகங்களின் சஞ்சாரங்களைக் கண்டு நாழிகை அறிந்தனர். வெள்ளியின் எழுச்சியும், வியாழனது வீழ்ச்சியும் உணர்ந்தனர். மார்கழி பௌர்ணமியில், வெள்ளி வியாழன்களின் உதயாஸ்தமனங்கள் 11, 12 வருஷங்கட்கு ஒரு முறை மட்டுமே நேர்தல் கண்கூடு என்று ஆராய்ந்து கூறியுள்ளார் பேராசிரியர் மு இராகவையங்கார்.

பெரியாழ்வாரின் 8-ம் நூற்றாண்டில் 'வெள்ளியெழுந்து வியாழம் உறங்கிய, வைபவம் ஒரே ஒரு முறைதான் நிகழ்ந்துள்ளது. அஃதாவது கி. பி. 731ம் ஆண்டு டிசம்பர் மீ 18உ வைகறை 3-50 முதல் 4 வரையுள்ள மணி ஆகும். அந்நேரமே அடிவானில் வியாழம் உறங்கப் போகும் சமயமும்—அதுவும் கண்களால் காணக்கூடிய சமயமாகவும் அமைந்தது. இந்நேரமே மார்கழி நீராடலுக்கு ஏற்ற காலமாகக் கருதிய ஸ்ரீகோதை தம் தோழிகளை துயிலெழுப்புகிறாள்.

'நமக்கு ஸ்வரூப ஞானம் உண்டானால் பகவான் தானே வருகிறான், நாம் எழுந்து செல்வதேன்?' என்று இருக்கும் உண்மையான பக்தி பூண்ட ஒரு பாகவதாளை உணர்த்துவது இப்பாசுரம். 'பொல்லா அரக்கன்' என்பது மனத்திலுள்ள அகங்காரம், ஆணவம், ஆசை, ஆத்திரம், காமம், கோபம், சஞ்சலம், சலனம், எரிச்சல், வெறுப்பு ஆகியவற்றை அழித்தொழிப்பவனே பகவான் ஆவான். 'வெள்ளி எழுந்து வியாழம் உறங்கிற்று' என்பதற்கு 'உண்மையான ஞானம் உதயமாகி, அஞ்ஞானம் மறைந்தது' என்றும் கொள்ளலாம். இக்கருத்தையே திருமங்கையாழ்வார்—

மன்னா இம் மனிசப் பிறவியை நீக்கி
தன்னாக்கித் தன்னின் அருள்செய்யும் தலைவன்
மின்னார் முகில்சேர் திருவேங் கடம்மேய
என்னானை என்அப்பன் என்நெஞ்சில் உளானே.

என்று போற்றி வணங்கி மகிழ்கிறார்.

# 14. சங்கொடு சக்கரமேந்தும் பங்கயக் கண்ணனே!

"திரு ஒளிர்ச் செல்வமே! தீந்தேன் தீங்குரலினிமை பெற்ற தேனுய், இனிக்க இனிக்க பேசும் திருநாக்கு உடையவளே!

உங்கள் இல்லத்தின் பின்புறம் உள்ள தோட்டத்தின் தடாகத்தினுள் செங்குவளை புஷ்பங்கள் மலர்ந்தன; அல்லி மலர்கள் கூம்பின—பார்த்தாயோ? காவிப் பொடி வண்ணம் ஒளிரும் காவி வஸ்திரம் தரித்த வெண்ணிறப் பற்களைப் பெற்ற துறவிகளும்கூட, தங்களுடைய திருக்கோயில்களுக்கு விரைந்து செல்கின்றனர், திருச்சங்கினை எடுத்து முழக்கமிடுவதற்காக.

எங்களை முன்னமேயே வந்து 'நானே எழுப்புவேன்' என்று வாயார, மனமார சொல்லிச் சொல்லிச் செயலில் மறந்து போன நங்கையே! ஸ்ரீகண்ணனையே போற்றிக் கொண்டிருக்கும் மங்கையே! சொன்னபடி செய்யாமல் விட்டுவிட்ட நாணம் இல்லாதவளே!

சங்கு சக்கரங்களை ஏந்தி சகல சௌபாக்கியங்களை அருளும் பெரிய கைகளை உடையவனும், இணைபிரியா தாமரை திருவுடன், தாமரை புஷ்பம் போன்ற திருக்கண்களை உடையவனுமான ஸ்ரீ திருமாலை போற்றுவதற்கு, போற்றிப் பாடுவதற்கு எழுந்திரு" என்று கனிவுடன் எழுப்புகின்ருள் ஸ்ரீநாச்சியார்.

உங்கள் புழைக்கடைத் தோட்டத்து வாவியுள்
செங்கழுநீர் வாய்நெகிழ்ந்து ஆம்பல்வாய் கூம்பின காண்!
செங்கல் பொடிக் கூறை வெண்பல் தவத்தவர்
தங்கள் திருக்கோயில் சங்கிடுவான் போகின்ருர்!
எங்களை முன்னம் எழுப்புவான் வாய்பேசும்
நங்காய்! எழுந்திராய் நாணுதாய்! நாவுடையாய்!
சங்கொடு சக்கரம் ஏந்தும் தடக்கையன்,
பங்கயக் கண்ணனைப் பாடேலோரெம் பாவாய்!

"பொழுது விடிந்ததோ விடியாமல் உள்ளதோ என்ற ஐயமே தேவையில்லை. அதற்காக நீ வெகுதூரம் சென்று வான் நிலையை பார்க்க வேண்டிய அவசியமே இல்லை. உங்கள் விட்டு புழக்கடையில் உள்ள பூம்பொழிலைச் சென்று பார். பொழுது புலர்வதற்கு அறிகுறியாக செங்குவளை மலர்கள் மலர, ஆம்பல்—அல்லி—புஷ்பங்கள் கூம்பியிருக்கிறதே" என்று தகுந்த அடையாளம் கூறுகிருள்.

"உங்கள் புழைக்கடை..." என்று உள்ளம் வெதும்பி—வெறுப்புடன் உறவு அறுத்துப் பேசுவது போலப் பேசுகின்ருள். ஏன்? 'இவள் இன்னும் எழுந்திருக்கவில்லையே பொழுது புலர்வதற்கான அடையாளம் பல கூறியும்...' என்ற மனவேதனையே காரணமாகும்.

'சங்கு இடுவது' என்பதற்கு 'சங்கு ஊதுவது' 'கதவைத் திறக்கத் திறவுகோல் இடுவது' என்று இரு பொருள் கொள்ளலாம். விடியற்காலைக்கு முன்பே வைகறையில் தங்கள் ஆலயங்கட்கு விரைகின்றனர் தவசிகளும், துறவிகளும். ஏன்? வலம்புரிச்சங்கினை எடுத்து சங்கொலி இசைக்கச் செய்து இறைவனை திருப்பள்ளி எழுச்சி செய்வதற்காகத்தான், இது ஒரு அடையாளம். ஆகவே எழுந்திருப்பாயாக—என்கிருள்.

நாச்சியார், இப்பாசுரத்தில் தம் தோழியை, 'நங்காய்' என்றும், 'நாணுதாய்' என்றும், 'நாவுடையாய்' என்றும் போற்றுகிருள். நங்கை... கன்னியர்களில் சிறந்தவள்—எனினும் 'வாய் பேசும் நங்காய்' என்று அழைத்ததால், 'உன் வாய்க்கும் வாய்மைக்கும் ஒரு தொடர்பும் உண்டோ?' என்கிருள். 'இனிமையான பேச்சு ஆனல் உண்மைப் பேச்சல்ல' என்கிருள்.

'நாணு தாய்'—சொன்னபடி செய்யவில்லை. பொய் சொல்லி விட்டதாக தோழியர் நினைத்துக் கொள்வார்களே என்ற எண்ணம்—அக்கறைகூட இல்லை... அதற்குரிய நாணம்—வெட்கம்—கூச்சம் எதுவுமே இல்லை.'—என்று வருத்தப்படுகிருள்.

கடும் ஞான பக்தி வைராக்கியங்களை உடைய, கண்ணனையே எண்ணி காலமெல்லாம் கடுந்தவம் இயற்றும் ஒரு பாகவதாளை எழுப்புவதே இப்பாசுரத்தின் உட்பொருளாகும்.

திருக்கண்டேன், பொன்மேனி கண்டேன், திகழும்
அருக்கன் அணிநிறமும் கண்டேன்,—செருக்கிளரும்
பொன்னுழி கண்டேன், புரிசங்கம் கைக்கண்டேன்
என்னுழி வண்ணன் பாலின்று.

நாமம் பல சொல்லி 'நாராயணு' வென்று
நாமங்கை யால் தொழுதும் நல்நெஞ்சே!—வாமருவி
மண்ணுலகம் உண்டுமிழ்ந்த வண்டறையும் தண்துழாய்,
கண்ணனையே காண்க நம் கண்.

என்று பேயாழ்வார், ஸ்ரீ கோதையின் உள்ளத்து உணர்ச்சிகளை அப்படியே சித்திரமாக்கித் தீட்டுகின்ருர் அன்ருே!

(23-ம் பக்கத் தொடர்ச்சி)

**आवयोर्गात्रसदृशं दीयतामनुलेपनम् ॥** என்று கண்ணன் கம்ஸனுக்கு சந்தனமளிக்கும் கூனியிடம் பிரார்த்தித்துப் பெற்ற சந்தனமேயாகவேண்டும்.

இந்த ச்லோகம் ஸ்ரீ விஷ்ணு புராணத்திலுள்ளது. கண்ணன் பலராமனுடன் மதுரையில் ராஜமார்க்கமாகச் சென்று கொண்டிருக்கும் போது அங்கு கம்ஸனுக்குச் சந்தனம் எடுத்துச் செல்லும் கூனியைக் கண்டு தமக்கும் அண்ணனுக்கும் உயர்ந்த சந்தனம் கொடுக்கும்படி கேட்டான். அவள் "இடைச்சேரியிலே பழகிய இவர்களுக்குச் சந்தனத்தின் வாசி எப்படி தெரியப் போகிறது" என்று நினைத்து வழக்கனுயிருக்கிற, அதாவது மட்டமான, இயற்கை மணமற்றதாய், செயற்கையினுல் மணம் பெற்ற சந்தனத்தைத் தந்தாள். அதற்குக் கண்ணன் **सुगन्धमेतत्** "புஷ்பாதிகளாலே ஏறிட்ட வாஸனையையுடைய சந்தனம் இது. இயற்கையான வாஸனையுள்ள சந்தனத்தை நாங்கள் விரும்புகிறோம்" என்ருன். பிறகு கூனி அதற்கு மேலான சந்தனத்தைக் காட்டினுள். **राजार्हमेतत्** 'சந்தனத்தின் வாஸனையறியாமல் செருக்கித் திரியும் கம்ஸனுக்குப் பூசும் சந்தனமிது' என்ருன் கண்ணன். அதற்கும் மேலான மற்ருெரு சந்தனத்தைக் காட்டினுள் கூனி. **रुचिरमेतत्** 'இது நிறம் அழகியதாக இருக்கிறது, ஆயினும் வாஸனை நன்ருக இல்லை' என்ருன் கண்ணன். இதைக் கேட்ட கூனி "வெண்ணெய் நாற்றத்தில் பழகின இவர்கள் சந்தனத்தின் வாசியை எப்படி அறிந்தனர்?" என்று சிரித்தாள். **रुचिरानने आवयोर्गात्रसदृशं दीयतामनुलेपनम् ॥** "சிரித்த முகமுடையவளே! வெண்மை நிறமும் கருமை நிறமும் வாய்ந்த எங்கள் உடம்புக்குத் தக்கதான சந்தனம் தா" என்று கண்ணன் யாசித்தான். இதைக் கேட்ட கூனி மிகுந்த ஆதரத்துடன், கம்ஸனுக்கு பயப்படாமலும் ஒரு வித பலனை எதிர்ப்பார்க்காமலும், இருவருக்கும் சந்தனத்தைப் பூசினுள். இதை பெரியாழ்வார்,

> நாறிய சாந்தம் நமக்கிறை நல்கென்ன
> தேறியவளும் திருவுடம் பிற்பூச
> ஊறிய கூனினையுள்ளேயொடுங்க,
> அன்
> றேறவுருவினுயச் சோவச்சோ,
> எம்பெருமான் வாராவச்சோவச்சோ

என்று காட்டினுர். கண்ணபிரானும் அதிஸந்துஷ்டனுய் முதலில் காட்டிய மூன்று சந்தனங்களை விலக்கியது போல அக் கூனியிடமிருந்த மூன்று கோணல்களை விலக்கி அவளை அழகியவளாகச் செய்தான். இவ்விதம் பூர்வர்கள் அபூர்வமாக வ்யாக்யானம் செய்தனர்.

நம்மாழ்வார் திருவாய்மொழியில் அருளிய கீழ்க்கண்ட பாசுரம் இங்கு அநுஸந்தேயம்.

> கோவை வாயாள் பொருட்டு ஏற்றி
> னெருத்தமிறுத்தாய், மதிளிலங்
> கைக்
> கோவை வீயச்சிள் குனித்தாய், குல
> நல்யானை மருப்பொசித்தாய்,
> பூவைவீயா நீர்தூவிப் போதால்
> வணங்கேனேலும், நின்
> பூவை வீயாம் மேனிக்குப் பூசும்
> சாந்து என் நெஞ்சமே.

நப்பின்னைப் பிராட்டிக்காக எருதேழு அடர்த்த போதென்ன, ஸீதா பிராட்டிக்காக இராவணனேடு பொருத போதென்ன, மதுரையில் கஞ்சனது மதயானையோடு பொருத போதென்ன, ஆகிய இப்போதுகளிலே உடனிருந்து உபசாரங்கள் செய்யப் பெற்றிலேனுகிலும், உன்னுடைய திருமேனிக்கு எனது ஹ்ருதயமே உபசாரம். அதாவது அந்தந்த ஸமயங்களில் உடனிருந்து உபசாரங்கள் பண்ணப் பெற்றிலேனே என்று இப்போது குறைப்படுகின்றதற்கு நெஞ்சே காரணமாதலால் இத்தகைய நெஞ்சு உண்டாகப் பெற்றவிதுவே உபசாரப்ராயம் என்றபடி. அன்றியே, உனக்குப் பூசும் சாந்து என்னெஞ்சமாய் விடுவதே! என்னெஞ்சிலே எம்பெருமான் இத்தனை உகப்பு செய்வதே! என்று ஈடுபடுகிருர் என்று கொள்ளலாம். ஆக, உயர்ந்த சந்தனத்தை கூனியிடம் தாம் விரும்பிப் பெற்ற கண்ணனிடம் இப்படி ஈடுபடும் ஹ்ருதயமே சிறந்த நறுமணமுடையதாகும் என்க.

*

## கருணை காட்டு

**விஷ்ணுப்** பிரபோ! என் மனத்தின் தீய போக்குகளை அடக்கு. எவ்வுயிரின் பாலுமுள்ள உன் கருணையை என்னிடமும் காட்டு. கர்வத்தை அழி.

கோவிந்தா! சற்குணங்கள் யாவற்றுக்கும் உறைவிடமான தாமோதரா! உன் கமல முகம் காண்பதற்கு மிக அழகாயுள்ளது.

நாராயணு, கருணுமயா, உன் பாதங்களில் சரணடைகிறேன். இத்துதி என்றும் என் நாவில் தவழட்டும்.

— விஷ்ணு ஷட்பதி.

தேனி எம். சுப்பிரமணி.

சிறுவர் பகுதி :

# குறுக்கெழுத்துப் புதிர்




எஸ். லோகநாயகி
கோயம்புத்தூர்.




| | | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| 1 | | | | | 2 | | | 3 | | |
| 4 | | 5 | | | | 6 | 7 | | 8 | |
| | 9 | 10 | 11 | 12 | | 13 | | | | 14 |
| | | | | | | | 15 | | | |
| 16 | | | | | 17 | | | 18 | 19 | |
| | | 20 | | 21 | | | | | | |
| | | | 22 | | | | | | | |
| | | 23 | | | | | 24 | | | 25 |
| | | | 26 | | | | | | | |
| 27 | | | | | 28 | | | | | |
| | 29 | | | | 30 | | | | | |

## குறிப்புகள்

### இடமிருந்து வலம்

1. மீனுட்சி (8 எழுத்துக்கள்)
3. மதுரை (3)
4. இரந்துண்ணி (6)
7. புகலி (4)
10. திருமால் (3)
13. கண்ணன் உரை (2)
16. துர்க்கை (3)
17. தென்மலை (3)
21. தங்க சபை பதி (6)
22. ஏழுமலையானின் ஒரு மலை (5)
23. இரத்தின சபை பதி (5)
26. கல் உருமங்கை (4)
27. கமலை (5)
28. சூடிக்கொடுத்த சுடர்க்கொடி (2)
29. சிருடி மகான் (4)
30. திருமந்திர ஆசிரியர் (3)

### மேலிருந்து கீழ்

1. திருக்கடவூர் நாயகி (4)
2. தேரோட்டி மகன் (4)
3. திருமால் அவதாரம் (4)
5. மலைநீலி (4)
6. கங்கை (4)
7. சிறையிருந்த செல்வி (2)
8. நகரேஷு........... (3)
9. நரசிம்ம பகைவன் (7)
11. வாலி நண்பன் (4)
12. கொம்பு முனி (8)
14. மணிவாசகர் (5)
15. நாகப்பட்டணம் (2)
16. நம்மாழ்வார் (5)
18. திருவளர் பள்ளிகொண்டய்யா (7)
19. சபாபதி (7)
20. தென் மதுரை (6)
24. கலகப்பிரியர் (4)
25. திருச்சீரலை வாய் (4)
27. ஸ்ரீ (2)

(விடைகளுக்கு)↓

## குறுக்கெழுத்துப் புதிர்

**இடமிருந்து வலம்:**

1. அங்கயற்கண்ணி
3. கூடல்
4. பிட்சாடனர்
7. சீர்காழி
10. முராரி
13. கீதை
16. சண்டி
17. பொதிகை
21. சிதம்பரம்
22. கருடாத்ரி
23. ஆலங்காடு
26. அகலிகை
27. திருவாரூர்
28. கோதை
29. சாய்பாபா
30. மூலர்.

**மேலிருந்து கீழ்:**

1. அபிராமி
2. கர்ணன்
3. கூர்மம்
5. சாமுண்டி
6. பகீரதி
7. சீதை
8. காஞ்சி
9. இரண்யகசிபு
11. ராவணன்
12. ரிஸ்யசிருங்கர்
14. வாதவூரர்
15. நாகை
16. சடகோபர்
18. ஸ்ரீரங்கநாதர்
19. அம்பலவாணர்
20. திருஆலவாய்
24. நாரதர்
25. செந்தில்
27. திரு.

# அக இருள் நீக்கும் ஆய்ச்சியர் அடிப்பொடி

வீதியில் அழுக்குச் சேர்கிறது; தண்ணீர் தெளித்து, கூட்டி, பெருக்கிக் கோலமிட்டுத் தூய்மை செய்து அழகு செய்கிறோம்.

வீட்டில் அழுக்குச் சேர்கிறது. மண் வீடாயின் மெழுகி அழுக்கு நீக்குகிறோம். சிமெண்ட் தரையாயின் நீரிட்டுத் தேய்த்துக் கழுவி ஒழுங்கு செய்கிறோம்.

உடம்பிலும் வியர்வைத் தோன்றுகிறது; புழுதி படிந்து அழுக்குச் சேர்கிறது. வாசனைப் பொடியிட்டு மணங் கமழும் சோப்பிட்டு அவ்வப்போது குளித்து அழுக்கு நீக்கி அழகு செய்து கொள்கிறோம்.

இவையெல்லாம் வெளியே தோன்றும் அழுக்குகள்; கண்ணுக்குத் தெரியுமாறு புறத்தில் தோன்றும் அழுக்குகள்.

இப்படிப் புறத்தில் அழுக்குகள் சேர்வது போல அகத்திலும், அதாவது நம் மனத்திலும் அழுக்குச் சூழ்கிறது. அந்த அழுக்குகளைக் கூட்டி, பெருக்கி, நீக்கியது போல, மெழுகிக் கழுவி அகற்றியது போல, தேய்த்துக் குளித்துப் போக்கியது போல, இந்த அழுக்கை-மனத்தினில் சூழும் இந்த அழுக்கை- அகற்றுதல் அவ்வளவு எளிமை அன்று. ஏனெனில் மனத்தில் தோன்றும் அழுக்கு மிகவும் நுட்பமானது; கண்ணுக்குப் புலப் படாதது; கையில் அகப்படாதது.

அப்படிக் கண்ணுக்குப் புலப்படாது, கைக்கு அகப்படாது மனத்தைச் சூழும் நுண்மையான அந்த அழுக்கு என்ன? அதுதான் எல்லாம் எனக்கே, எல்லாரும் என் சொற்படியே கேட்க வேண்டும் என்று நினைக்கிற நினைப்பாகிய அழுக்கு.

லாந்தர் விளக்கிலுள்ள கண்ணாடியெல்லாம் கரிய புகை சூழ்ந்து கொண்டு ஒளிப்பிழம்பை மறைத்து விடுகிறதல்லவா! அது போலவே, எல்லாம் நான், எல்லாம் எனக்கே என்ற இந்த அழுக்கு மனத்தை இருளாக்கி, உண்மை தெரியாமல் மறைத்து விடுகிறது.

இந்த மறைப்பு கற்றவர்களிடத்திலும் இருக்கிறது; கல்லாதவர்களிடத்திலும் இருக்கிறது. குழந்தைகளிடத்தும் இருக்கிறது; பெரியவர்களிடத்தும் இருக்கிறது! ஆண்கள் இடத்தும் இருக்கிறது; பெண்களிடத்தும் இருக்கிறது. சிற்சில சமயங்களில் நல்லவர் மனத்திலும் இருக்கிறது. சான்றோர் மனத்திலும் கூட இந்த 'நான்' என்னும் அழுக்கு பற்றிக் கொள்கிறது.

அப்படித்தான் ஒரு முறை நாரதரை இந்த அழுக்கு பற்றிக் கொண்டது. 'நாராயணா'; 'ஹரே நாராயணா 'நாராயணா'; ஹரே நாராயணா' என்று பாடிக் கொண்டே நாரதர் வான வீதியில் வந்து கொண்டிருந்தார். அவர் கண்ணின் முன்னே துவரையம்பதி தோன்றிற்று.

'இதோ துவாரகையின் கோபுரங்கள் கண்ணுக்குத் தெரிகின்றன. 'கண்ணனைப் பார்த்து வெகு நாட்களாகி விட்டன. பார்த்து வருவோம்' என்று நினைத்துத் துவரையம்பதிக்கு நடக்கலானார்.

இடையிலே அவர் தன் மனத்தில் இப்படி நினைத்துக் கொண்டார். 'கண்ணனிடத்தில் எனக்குத் தான் எவ்வளவு அன்பு எவ்வளவு பாசம்! எவ்வளவு பத்தி! என்னைப் போல் அன்பும் பாசமும், பண்பும் பக்தியும் கண்ணனிடம் கொண்டவர்கள் உலகில் யார் இருக்கிறார்கள்' என்று நினைத்துத் தன்னைத் தானே வியந்து கொண்டார்.

அதற்குள் துவரையம்பதியும் நெருங்கிவிட்டது. மாளிகையில் இருந்தபடியே கண்ணபிரான் நாரதரைக் கவனித்தான். 'அவர் மனத்தில் தன்னைவிட சிறந்தவர் இல்லை. நான் தான் நிறைந்த அன்புள்ளவர் என்ற அழுக்கு உண்டாகிவிட்டதைக் கண்டு கவலைப்பட்டான்! நாரதன் நம் அன்பன் அல்லவா? அவன் மனதில் தோன்றிய இந்த அழுக்கை அழிப்பது நம் கடமையல்லவா?' என்று கண்ணபிரான் கருணையோடு எண்ணினார்.

உடனே, வாயிற் காவலனைக் கூப்பிட்டு, "காவலனே! இதோ நாரதர் வந்து கொண்டு இருக்கின்றார். எனக்கு உடம்பு சரியில்லை. அவர் வந்தால் 'உடம்பு சரியில்லை உள்ளே படுத்திருக்கிறார்' என்று சொல்லி உள்ளே அனுப்பி வை" என்று கூறிப் போர்த்திக் கொண்டு உடலெல்லாம் சுரத்தில் நடுங்குவது போல தன் அறையில் படுத்துக் கொண்டார்.

**பொன். சௌரிராஜன்-திருப்பதி.**

வந்த நாரதரிடம் காவலன் கண்ணன் கூறியபடி கூறி உள்ளே அனுப்பி வைத்தான். நாரதன் வருவதை ஓரக் கண்ணால் பார்த்தக் கண்ணன் சுரத்தில் வருந்துவது போல 'ஆ' 'ஆ' என்று கத்திக் கொண்டு புரண்டு புரண்டு படுத்தான்.

அதனைப் பார்த்த நாரதர் மிகவும் கலவரத்தோடு ஓடி வந்து 'கண்ணா! கண்ணா! உனக்கு உடம்பு என்ன செய்கிறது. ஏன் இப்படி வருந்துகிறாய்' என்று வருத்தத்தோடு கேட்டார்.

அது கேட்ட கண்ணன் 'அட போப்பா நாரதா! தலை வலியால் காலையிலிருந்து தவிக்கிறேன்.

ஏனென்று கேட்பார் எவரும் இந்த மாளிகையில் இல்லே. ஐயோ! என்ன செய்வேன்' என்று கூறித் தன் இரு கைகளாலும் தலையைப் பிடித்துக் கொண்டு 'ஆ' 'ஊ' என்று கத்தினன்.

உடனே நாரதர் 'கண்ணு! கவலைப் படாதே. இதோ நான் வந்து விட்டேன். யார் உதவாவிட்டாலும் போகட்டும்; நான் உதவுவேன். என்ன மருந்து வேண்டும்? சொல். நான் கொண்டு வருகிறேன். என்ன செய்ய வேண்டும்? நான் செய்கிறேன். உன் தலை வலியை நானே போக்குகிறேன்' என்று சொன்னன்.

'அய்யோ நாரதா! உன்னுல் முடியாதப்பா. வீணுக நீ ஏன் அலைந்து திரிய வேண்டும். என்னவோ என் தலைவிதி, நான் அனுபவிக்கிறேன்!' என்று தன்னைத் தானே கண்ணன் நொந்து கொண்டான்.

'கண்ணு என்னைப் பற்றி என்ன நினைக்கிருய். என்னுலும் முடியாததா? அது என்ன அப்படிப்பட்ட மருந்து? சொல் எங்கிருந்தாலும் கொண்டு வந்து தருகிறேன். சொல் கண்ணு! சொல்' என்று நாரதர் வேண்டினர்.

'நாரதா! நான் சொன்னல் கேட்க மாட்டாய், என்னிடம் உள்ள அன்பால் இப்படிப் பேசுகிருய். உன்னுல் அது முடியாது என்றுலும் கேட்க மாட்டாய் சரி. சொல்கிறேன் கேள்!' என்று கூறி நன்ருகத் திட்டமிட்டுக் கொண்டு பின்வருமாறு கண்ணன் கூறினன்.

'நாரதா இதுதான் மருந்து. நன்ருகக் கேட்டுக் கொள். என்னிடம் உண்மையான அன்புள்ள ஒருவருடைய கால் தூசியைக் கொண்டு வந்து என் தலையின் இரு பொட்டிலும் தடவினல் இந்தத் தலைவலி போய்விடும்' என்று சொல்லி 'அய்யோ' 'அப்பா' என்று பழைய படியே புரண்டு புரண்டு இருகைகளையும் தலையில் இறுகப் பிடித்துக் கொண்டு வருந்தினன்.



மீனுட்சி அம்மன் திருக்கோயில் ராஜகோபுரம் - மதுரை.
திரு. வி. முத்துராமன் - கோவை.

'என்ன கண்ணு? அன்பு உள்ளவர்கள் இந்த மாளிகையிலேயே இருக்கிருர்கள்' என்று சொல்லி நாரதர் ருக்குமணி தேவியிடம் போய் 'அம்மா உன் திருவடிகளைக் கொஞ்சம் காட்டம்மா உன் கால் தூசியைச் சிறிது எடுத்துக் கொள்ள வேண்டும்' என வேண்டினன்.

'ஐயா நாரதரே என் கால் தூசியைத் தாங்கள் தொடுவது, தொடச் செய்வது எவ்வளவு பாவம்' என்று ருக்குமணி மறுத்தாள். 'அப்படி சொல்லாதம்மா, இந்த தூசு எனக்கல்லம்மா. கண்ணன் தலைவலியால் தவிக்கிருன். அன்புள்ள ஒருவருடைய கால் தூசியைக் கொண்டு போய் அவன் தலையில் தடவினல் அந்தத் தலைவலி நீங்கும் என்று சொன்னர். அதற்குத்தானம்மா நான் கேட்டேன்' என்று ஏங்கினர்.

'அடப்பாவி நாரதா! உனக்கு என்ன கெட்ட எண்ணம்? என் கால் தூசியைக் கொண்டு போய் என் நாயகன் தலையில் போடுவதா? என்ன பாவம்! என்மீது உனக்கு எவ்வளவு கெட்ட எண்ணம். நான் தரமாட்டேன் போயா புத்தியில்லாதவரே' என்று அனுப்பிவிட்டாள்.

அன்புள்ளவராக தான் கருதிய ஒவ்வொருவரிடமும் சென்று திட்டு வாங்கி வாங்கி நாரதர் மிகவும் சோர்ந்து போய்விட்டார். 'அடடா தெரியாத்தனமாக இப்படி மாட்டிக் கொண்டோமே. கால்களும் களைத்து விட்டனவே, காலமும் கடந்து கொண்டு இருக்கின்றதே என்ன செய்வது' என்று புலம்பிக் கொண்டே யமுனை நதியில் ஒரு புன்னை மரத்தின் அடியில் உட்கார்ந்திருந்தார்.

மாலைப் பொழுது நெருங்கிக் கொண்டு இருந்தது. பசுக் கூட்டங்களெல்லாம் ஊரை நோக்கித் திரும்பிக் கொண்டு இருந்தன. யமுனை நதிக்கரையில் நீர் மொண்டு கொண்டு ஆய்ச்சியர்கள் கூட்டம் கூட்டமாக வீட்டிற்குத் திரும்பிக் கொண்டிருந்தனர்.

அப்போது நீர் மொண்டு மீளுகின்ற ஆயர் சிறுமியருள் ஒருத்தி நாரதரைப் பார்த்து விட்டாள். 'அடியே! இதோ நாரதரடி. ஓடி வாருங்கள். நம் கண்ணனைப் பற்றிக்

கேட்போம்' என்று எல்லோரையும் அழைத்துக் கொண்டுவந்து,சோர்ந்து வாயில் புலம்பியபடி கிடந்த நாரதரைச் சுற்றிக் கொண்டுக் கண்ணனைப் பற்றி ஒவ்வொரு ஆய்ச்சியும் பலபல கேள்விகள் தொடர்ந்து கேட்டனர். 'ஐயோ ஐயோ ஏனம்மா என்னை இப்படித் தொல்லைப் படுத்துகிறீர்கள். கண்ணனுக்கு உடம்பு சரியில்லை. மருந்து தேடிக் கொண்டு வந்தேன். உலகமெல்லாம் சுற்றி விட்டேன் எங்கும் கிடைக்கவில்லை. கை, கால்கள் களைத்துவிட்டன; மனமும் சோர்ந்து விட்டது. தொல்லை கொடுக்காமல் போங்கம்மா' என்று கூறி தன்னைத் தானே நொந்து கொண்டான்.

'ஐயா நாரதரே உங்களுக்குக் கோடி புண்ணியம். என்ன மருந்து? என்று சொல்லுங்கள்' என்று எல்லோரும் கேட்டுத் தொல்லைப் படுத்தினர்.

நாரதர் 'சரி, தொல்லை செய்யாதீர்கள் சொல்லித் தொலைக்கிறேன். உங்களால் முடியாது' என்று கூறி மருந்தைச் சொன்னர். உடனே ஒவ்வொரு ஆய்ச்சியும் தங்கள் பாதங்களைத் தூக்கித் தூசுகளைவழித்தெடுத்துக் கொள்ளும்படி கூறினர்.,

நாரதர் 'உங்களுக்கு என்ன பைத்தியமா. உங்கள் கால் தூசி கண்ணபிரான் தலையில் பட்டால் பாபமல்லவா? உங்களுக்கு நரகமல்லவா கிடைக்கும்? உங்கள் புத்திப் பேதலித்து விட்டதா?' என்று கூறி கால் தூசிகளை எடுத்துக் கொள்ள மறுத்துவிட்டார். 'ஓய் நாரதரே எங்களுக்குப் பாவம் வந்தால் வரட்டும். நாங்கள் நரகத்தில் கிடந்து துன்பப்பட நேர்ந்தாலும் நேரட்டும். கண்ணன் தலைவலி நீங்கினுல் போதும். அதனுல் இந்தப் பிறவி மட்டுமல்ல, இனிவரும் பிறப்புகளிலெல்லாம் நரகத்தில் இருக்கத் தயார்' என்று கூறி ஒவ்வொரு ஆய்ச்சியும் தங்கள் காலில் உள்ள தூசுகளைத் தட்டி அள்ளி கொள்ளச் சொன்னுர்கள். துண்டை விரித்துப் போட்டு ஆயர் சிறுமியரின் கால் தூசுகளையெல்லாம் மூட்டைக் கட்டிக் கொண்டு தலையில் வைத்துக் கொண்டு துவரையம்பதிக்கு வந்து சேர்ந்தார் நாரதர்.

புன்னகை செய்தபடியே வாயிலில் நின்று கொண்டு மாயன் நாரதரை வரவேற்ருன்.

'கண்ணு! இதோ மூட்டை நிறைய கால் தூசி கொண்டு வந்திருக்கிறேன் இதற்குள்ளே தலைவலி போய்விட்டதா?' என்று ஏக்கத்தோடு கேட்டார் நாரதர்.

கண்ணன் சிரித்துக் கொண்டே 'ஆயர் பாடியில் ஆய்ச்சியர் திருவடியில் நீ தொட்ட போதே என் தலைவலி போய் விட்டது. ஏனப்பா நாரதா! என்னிடம் அன்புள்ள ஒருவருடைய கால் தூசிதானே கேட்டேன். உடனே ஊரெல்லாம் உலகமெல்லாம் சுற்றி வந்தாயே. உனக்கு என் மேல் அன்பில்லையா? உன்கால் தூசுகளைப் போட்டிருந்தால் அப்போதே என் தலைவலி போயிருக்குமே!' என்று சொல்லி, 'கலகல' என்று சிரித்தான்.

அந்தச் சிரிப்பு ஒலியில் இருள் அகன்றது. 'கண்ணு! பிறவிகளெல்லாம் நரகத்துக்குப் போனுலும் என் கண்ணனுடைய தலைவலி நீங்கினுல் போதும் என்று எண்ணிய ஆய்ச்சியருடைய தன்னலமில்லாத தூய அன்புக்கு அருகதையில்லேன். என் ஆணவம் அழிந்து விட்டது' என்று சொல்லி கலங்கிய நாரதரைக் கண்ணன் தழுவிக் கொண்டு தன்மயமாக்கினுன்.

---

(20-ம் பக்கத் தொடர்ச்சி)

இரண்டாம் குலோத்துங்கனது நான்காவது ஆண்டுக் கல்வெட்டொன்ருல் சீர்காழி திருஞான சம்பந்தர் கோவிலில் நெடுநாளாகத் தேவாரத் திருமுறைகள் பாடப்பட்டிருந்தனவென்றும் செய்திகள் கூறுகின்றன.

கோவில்களில் பஞ்சபுராணம் பாடிய ஓதுவார்களை மக்கள் நன்கு மதித்திருந்தனர். பன்னிரு திருமுறைகள் பாடுகின்ற சந்தர்ப்பங்களில் திருமுறைகளுக்கொரு பாடல் வீதம் பாடுவார்கள். திருக்கோவையாரும் திருப்பல்லாண்டும் சேர்ந்து பதினுன்கு பாடல்கள் ஆகும். திருப்பல்லாண்டு பஞ்ச புராணங்களுள் ஒன்று. அதைப் பாடியே தீர வேண்டும். ஆனுல் திருக்கோவையார் மட்டும் அவரவரது விருப்பத்தைப் பொறுத்ததாகும். ஒன்பதாம் திருமுறை பாடும்பொழுது ஒரு பாடல் பாடினுல் திருப்பல்லாண்டு பாட வேண்டியதில்லை. இவ்வாறு திரு. மு. அருணுசலம் அவர்கள் தமது பஞ்சபுராணம் என்ற கட்டுரையில் குறிப்பிடுகிருர்.

திருமுறை வரிசையிலேயே பாடல்களைப் பாடவேண்டும் என்பது மரபு. ஆனுல் திருவாரூரில் மட்டும் திருக்கோவையாரைப் பெரிய புராணம் பாடியதன் பின்னர் பாடவேண்டுமென்பது மரபாகவுள்ளது.

யாராலோ ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்னுல் தொடங்கி வைக்கப்பட்ட ஒரு வழக்கம் இன்றும் தொடர்ந்து கடைபிடிக்கப்பட்டு வருவது நமக்குப் பேருவகையைத் தருகிறது: இறைவழிபாட்டில் பெரிதும் ஈடுபாடு காட்டுகின்ற தமிழக மக்களின் பண்பாட்டின் உயர்வை இது தெளிவாகத் தெரிவிக்கிறது எனலாம். ★

# கீதை காட்டும் நல்வழி

மோக்ஷ ஸன்யாஸ யோகம்

அத்தியாயம் — 18

பகுதி — 10

ஞானத்தையும் கர்மத்தையும் மூவகையாகப் பிரித்த பிறகு பகவான் கர்த்தாவை மூவகையாகப் பாகு படுத்துகிறார்.

முக்தஸங்கோ அனஹம்வாதீ
த்ருத்யுத்ஸாஹ ஸமன்வித: |
ஸித்யஸித்யோர் நிர்விகார:
கர்தா ஸாத்விக உச்யதே || (18-26)

பற்று நீங்கியவன், அஹங்கார மற்றவன், உறுதியும் ஊக்கமு முடையவன், வெற்றி தோல்வியில் வேறுபடாதவன்-இத்தகைய கர்த்தா ஸாத்விகன் எனப்படுகிறான்'.

கீதையின் சாரமே 'பற்றற்ற கர்மத்தில்' அடங்கிவிடுகிறது. பகவான் திரும்பத் திரும்ப கீதை முழுவதும் இந்தக் கருத்தைப் பல இடங்களில் வலியுறுத்துகிறார். 'ஓயாது செயல் புரிந்து கொண்டே இருக்க வேண்டும். செய்யும் கருமங்களின் விளைப்பலனில் பற்று வைக்கலாகாது. அப்படியாயின் கர்மங்களின் செயல் திறன் பன்மடங்கு அதிகரிக்கும். வெற்றி தோல்விகள் செய்பவனை எந்த விதத்திலும் பாதிக்காது'.— இதுதான் கீதை கூறும் கர்மயோகம். சாத்விகக் கர்த்தா 'செய்யும் செயல்களின் பலனில் பற்று அற்ற' முக்த ஸங்கனாக காட்சி தருகிறான்.

'அஹங்காரம்' என்பது 'நான் செய்கிறேன்' என்ற எண்ணத்தைக் கொண்டு விளங்குவதாகும். ஸாத்விக குணமுடையவனிடம் இந்த அஹங்காரம் அறவே இருக்காது. மாறாக அவர்களிடம் 'எல்லாம் ஈசன் சொரூபம்.எல்லாம் எனையாளும் ஈசன் செயல். அவன் ஆட்டுகின்றான். நான் ஆடுகின்றேன்" என்று அஹங்காரம் சிறிதுமின்றிய அடக்கம் காணப்படும்.அஹங்காரம் இருந்தால் அங்கு சாத்விகம் இல்லையென்று பொருள். நம்மில் அகங்காரம் அற்றவர் எவரேனும் உண்டா?

செய்யும் செயலில் உறுதி வேண்டும். ஊக்கம் வேண்டும். உறுதியும் ஊக்கமும் அதிகரிக்கின்ற அளவு செயல் வெற்றிக்கும் செய்வோனுக்கும் இடையேயுள்ள இடைவெளி குறைகிறது. வெற்றிக்கான வாய்ப்பு அதிகரிக்கிறது. 'காலம் கருதி இருப்பர் கலங்காது ஞாலம் கருதுபவர்' என்ற குறளுக்கேற்ப உறுதியும் ஊக்கமுடையவர்கள் ஊழையும் உட்பக்கம் காண்பர்.

ஸாத்விக புத்தி உடையவர்கள் வெற்றி வந்தாலும் தோல்வி வந்தாலும் நிலை குலையாது தாம் கொண்ட கொள்கையிலும் எடுத்த கருமத்திலும் உறுதியாயிருப்பர். சாதாரண மக்கள் வெற்றி வந்தால் துள்ளுவர். தோல்வி வந்தால் துவளுவர். ஆனால் ஸாத்விக கர்த்தாக்கள் வெற்றி தோல்வியில் மதிமயங்காது சம பாவனையோடு இருப்பர்.

ராகீ கர்மபலப்ரேப்ஸுர்
லுப்தோ ஹிம்ஸாத்மகோऽசுசி:
ஹர்ஷ சோகான்வித: கர்தா
ராஜஸ: பரிகீர்த்தித: || (18-27)

ஆசையுள்ளவன், வினைப்பயனை விரும்புபவன், உலுத்தன், துன்புறுத்தும் தன்மையன், சுத்தமில்லாதவன், மகிழ்வும், சோர்வும் கொள்பவன்—இத்தகைய கர்த்தா ராஜனெனப்படுகிறான்".

சிலரது மனதில் ஆசைகள் சதா அலைமோதிக் கொண்டிருக்கும். சதா அது வேண்டும், இது வேண்டும் என்று அவர்கள் எதையாவது விரும்பிக் கொண்டேயிருப்பர். அத்தகையவர்கள் தாங்கள் செய்யும் செயல்களுக்கு உடனடியாகப் பலன்களை எதிர் பார்ப்பர். தாங்கள் விரும்பிய பொருள்கள் கிட்டாத நிலைமையில் தங்கள் முயற்சிக்கு இடையூறு யமைபவர்களுக்கு இத்தகையவர்கள் தீங்கிழைக்கவும், துன்பம் கொடுக்கவும் தயங்கமாட்டார்கள். அவர்களது எண்ணத்திலும், சொல்லிலும், செயலிலும் சுத்தமிருக்காது. தாங்கள் விரும்பியது கிட்டிவிட்டால் அவர்கள் மகிழ்ச்சியால் துள்ளிக் குதிப்பர். கிட்டாவிடில் துன்பத்தில் துவளுவர்.

பேராசிரியர் டி. கே. நாராயணன் M.S.c., M.Phil
ஆசிரியர், 'சமயஜோதி' மதுரை.

ராஜஸிக குணம் நிறைந்தவனது கர்த்ருத்வ பாவனை இத்தகையதாகும்.

தாமஸிக கர்த்தாவின் பான்மை அடுத்த சுலோகத்தில் விளக்கப்படுகிறது.

அயுக்த: ப்ராக்ருத: ஸ்தப்த:
சடோ நைஷ்க்ருதிகோऽலஸ:
விஷாதீ தீர்க்க ஸூத்ரீ ச
கர்தா தாமஸ உச்யதே || (18-28)

"யோகத்துக்கு ஒவ்வாத மனமுடையன். அறிவு வளரப்பெறாதவன், வஞ்சகன், முரடன், பழிகாரன், சோம்பேறி, துயரப்படுபவன், காலம் நீடிப்பவன்—இத்தகையவன் தாமஸிக கர்தா எனப்படுகிறான்"

'அயுக்த: என்ற வார்த்தை யோக வாழ்விற்கும் பொருந்தாத மனத்தை உடையவன் என்று

## அதிசயமான சுவர்க் கடிகாரம்

இங்கிலாந்தில் "வெஸ்ட் ஆக்ரே" என்ற கிருஸ்துவ தேவாலயத்தில் ஒரு அதிசயமான அமைப்புக்கொண்ட சுவர்க்கடிகாரம் உள்ளது. இதன் டயலில் 1 முதல் 12 எண்களுக்குப் பதிலாக ஆங்கிலத்தில் "Watch And Pray" என்பது வரிசையாக எழுதப்பட்டிருக்கும். "கடிகாரத்தைக் கவனி! பிரார்த்தனை செய்!" என்ற இரு பொருள் தரும் வகையில் இது காண்போர் கண்ணையும் கருத்தையும் கவரும் வகையில் அழகுடன் அமைக்கப்பட்டுள்ளது.

ஏ. நாகராஜன் — கடலூர்.

## கிருஷ்ண பக்தி

ஆயிரம் ஆயிரம் பிறவிகள் கொண்டு தவம், தியானம், யோகம் மூலம் பாவங்களை அறவே அழித்த பிறகு அடையக் கூடியதுதான் கிருஷ்ண பக்தி. ஏனெனில் அது கண்ட இடத்தில் முளைத்து பூக்கும் கள்ளிப் பூ அல்ல. பாக்கியவான்கள் மாளிகையில் (மட்டுமே) மலரும் பாரிஜாத மலர் அது!

ஜன்மாந்தர ஸஹஸ்ரேஷு தபோத்யான ஸ்மாதிபி:
நராணும் க்ஷீண பாபாஞம் க்ருஷ்ணே பக்தி: ப்ரஜாயதே:

ஆர். சுப்பராவ் — திருக்கோவலூர்.

பொருள்படுகிறது. இதிலிருந்து என்ன தெரிகிறது? மோகத்திற்குப் பொருந்தும் மனத்திற்கென்று சில பிரத்தியேக குணங்கள் இருக்கின்றன என்பது புலனாகிறது. அடக்கம், பணிவு, சாந்தம் போன்ற நற்குணங்கள் பொருந்திய மனம்தான் யோகத்திற்கு ஏற்ற மனமாகும். தாமஸிகனிடத்தில் அந்த நல்லியல்புகள் ஒன்றும் இருக்காது. வயதாகியிருந்தும் அறிவு வளர்ந்திருக்காது. வயது 40 எனினும் 14 வயதுப் பாலகனின் செயல்களைப்போல அவனது நடவடிக்கைகள் இருக்கும். செயலில் முரட்டுத்தனம் மேலோங்கியிருக்கும். சொல்லிலும், செயலிலும் வன்மைக் காணப்படும். அதட்டல், உருட்டல், மிரட்டல் போன்றவை அவனிடம் இயல்பாகவே காணப்படும். மதிப்புக் கொடுக்க வேண்டிய பெரியோரிடம் அவன் முறை தவறி நடந்து கொள்வான். எவரைக் கண்டாலும் எதற்கெடுத்தாலும் சந்தேகப்படுவான். நல்லவர்களை ஐயுறுவான். கெட்டவர்களை நம்பி மோசம் போவான். எதிலும் தீமையையே காண்பான். காரணம் அவனது மனத்தைத் தீமை கவ்வியுள்ளது. சொல்லிலும் செயலிலும் வஞ்சகம் கலந்தே காணப்படும். சோம்பேறியாய்க் காலத்தைக் கழிப்பான். எந்தக் காரியத்தையும் அவன் ஒத்திப்போடுவதில் நிபுணன். சோம்பேறித்தனத்தால் தன்னிடம் இருக்கும் திறமைகளைக்கூட வெளிக்காட்டாமல் மறைப்பான். எவரிடம் பழகினாலும் அவர்களிடத்தில் இருக்கும் நற்குணங்களையெல்லாம் மறைத்துவிட்டு ஏதாவது சிறிதளவு தீயகுணம் இருந்தால்கூட அதை மிகைப்படுத்திக் கூறுவான். பழி வாங்கும் போக்கும் அவனிடம் மிகுந்து காணப்படும். எதிலும் அவன் எதிரிடை குணத்தையே காண்பதால் அவனது மனம் அமைதியின்றித் தவிக்கும்.

துன்பப்படுபவனிடமிருந்து பேராற்றல்கள் அனைத்தும் மறைந்துபோய் விடுகின்றன. அர்ஜுனன் உலகம் போற்றிய மாவீரன் எனினும் நெருக்கடியான நிலையில் அவனிடமிருந்த வீரம் மறைந்துபோய்விட்டது. அவன் பேடி போன்று போர்க்களத்தில் அழத்தலைப்பட்டான். தன் நிலை இழந்து தவித்த அத்தகைய அர்ஜுனனுக்கு பகவான் பகவத் கீதையைப் போதித்தார். விரைவில் முடிக்க வேண்டிய வேலையை வீணே நீட்டித்துக் கொண்டுபோகும் தன்மை தாமஸ சுபாவம் உள்ளவர்களிடத்தில் உண்டு. அதனால் அவனது வாழ்க்கை வீணாகிறது.

புத்தேர் பேதம் த்ருதேஸ்சைவ
குண தஸ்த்ரிவிதம் ச்ருணு |
ப்ரோச்ய மானமசேஷேண
ப்ருதக்த்வேன தனஞ்ஜய ||

(18-29)

அறிவினுடையவும், மன உறுதியுனுடையவும் ஆகிய வேற்றுமையைக் குணங்களுக்கேற்பப் பாகுபடுத்திப் பாக்கியில்லாமல் பகர்கிறேன் கேள் தனஞ்ஜயா!

எதைச் செய்ய வேண்டும், எதைச் செய்யக்கூடாது என்பதைப் பிரித்தறியும் பாங்கு அறிவு எனப்படுகிறது. அத்தகைய அறிவு அல்லது புத்தியினிடத்தில் மூவிதப் பிரிவுகள் உள்ளன. அதேபோல செய்ய வேண்டிய காரியத்தை தளராத மன ஊக்கத்துடன் செய்ய உதவும் உறுதியும் மூவகைப்படுகிறது. இதன் விளக்கம் இனிவரும் சுலோகங்களில் காணப்படுகிறது.

(தொடரும்)



# திருவல்லிக்கேணிக் கண்டேனே!

பக்தவத்சலனுகிய பரந்தாமன் தன் பக்தனுக்குத் திருவருள் புரியும் தகைமை கொண்டவன். நீலன் என்ற திருமங்கைமன்னன் அருகு சென்று, அவனது திருச்செவியில் பிறவிப் பிணியைத் தீர்த்து, முத்தி யருளும் பரம பாவன திவ்யத் திரு மந்திரமாகிய "ஓம் நமோ நாராயணு!" என்னும் அஷ்டாக்ஷரத்தை உபதேசித்தருளியும், கருடவாகன மேறி ஸ்ரீ லக்ஷ்மி சமேதனுய், பிரமன் இந்திரன் மற்றுமுள்ள தேவர்கள் சூழக் காட்சியும் தந்தருளினுர்.

காணுதற்கரிய திருக் காட்சியைக் கண்ட திருமங்கையாழ்வார் தொண்டைநாட்டுத் திருப்பதிகள் சென்று, பிருந்தாரணிய க்ஷேத்திர மாகிய திருவல்லிக்கேணியை அடைந்தார். பார்த்தசாரதி வேங்கட கிருஷ்ணன் கோயிலுக்குள் ஆனந்தம் மேலிட்டுக் களிப்புடன் சென்றுர். இறைவன் நின்ற திருக்கோலத்தில், கிழக்கே திருமுக மண்டலத்துடன் காணவே, "திருவல்லிக்கேணிக் கண்டேனே" எனப் பத்துப் பாசுரங்கள் பாடிப் பரவசமடைந்தார்.

அவைகளில் சிலவற்றை நாம் காண்போம், இங்கு. மந்நாதன் என்ற ஸ்ரீ ரங்கநாதன் புஜங்கசயனத்தில் துயிலமர்ந்த வித்தகனைக் கண்டார். ஸ்ரீராமன், இளையபெருமான், பரதாழ்வான், சத்ருக்கன், மைதிலி ஒருங்கே தெற்கே திருமண்டலத்தில் காட்சி அருளினர்.

தெள்ளியசிங்கர் என்ற நரசிம்மரையும் காணவே, திருமங்கையாழ்வார் ஆநந்தக்கண்ணீர் வடித்தார். நரசிம்மனுடைய பிரதாபத்தையும், பக்த இளைஞன் பிரகலாதனுடைய உன்னதத்தையும் தன் மனக்கண்ணுல் காணவே, நரசிம்மன் திருவடியில் ஒரு பாசுரத்தை அருளிச் செய்தார்:

பள்ளியி லோதி வந்ததன் சிறுவன்
வாயில் ஓராயிர நாமம்
ஒள்ளிய வாகிப் போத ஆங்கதனுக்கு
ஒன்றுமோர் பொறுப் பிலனுகி
பிள்ளையைச் சீறி வெகுண்டுதூண் புடைப்பப்
பிறையெயிற் றனல்விழி பேழ்வாய்
தெள்ளிய சிங்க மாகிய தேவைத்
திருவல்லிக் கேணிக்கண்டேனே

கருத்து :

பிரகலாதன் - இரணியன் மகன் — கல்விச்சாலையில் ஓதி வந்து, பகவந்நாமங்களை வாய் மணக்கச் சொல்ல, அதைப் பொறுக்கமாட்டாமல், தூணைத் தட்ட, அதில் நரசிம்ம ரூபியாய்த் தோன்றின பகவானைத் திருவல்லிக்கேணியில் காணப் பெற்றேன். பிரகலாதன் தன் தந்தை இரணியனிடம் கைகூப்பிக் கூறுகின்றுன், கம்பன் திருவாக்கிலே.

சாணிலும் உளன் ஓர்தன்மை
அணுவினைச் சதகூ றிட்ட
கோணிலும் உளன்; மாமேருக்
குன்றிலும் உளன்; இந்நின்ற
தூணிலும் உளன்; நீ சொன்ன
சொல்லினும் உளன்; இத்தன்மை
காணுதி விரைவில் என்றுன்.

பரமன் அணு, அண்டம் எங்கும் உள்ளான். 'இந்தத் தூணிலும் உள்ளான்' எனப் பிரகலாதன் தன் தந்தை இரணியனிடம் இடித்துரைத்தான்.

இரணியன் : அப்படியானுல், எங்கும் உள்ளவனை இந்தக் கம்பத்தில் காட்டு பார்ப்போம். இன்றேல் சிங்கம் யானையைக் கொல்லுவது போல் உன்னைக் கொன்று, இரத்தம் பிழிந்து உண்பேன்.

பிரகலாதன் : தந்தையே, என்னுயிரை உன்னுல் கொல்ல முடியாது; என்னுயிர் இறைவன், நான் தொட்ட இடத்தில் தோன்றுவிட்டால், என்னுயிரை நானே விடுவேன். இன்றேல், அன்னவனுக்கு அடிமை அல்லேன்.

என் உயிர் உன்னுல் கோறற்கு
எளியது ஒன்று அன்று; யான்முன்
சொன்னவன் தொட்ட தொட்ட
இடந்தொறும் தோன்று ணுயின்
என்னுயிர் யானே மாய்ப்பல்;
பின்னும்வாழ் வுகப்பல் என்னின்;
அன்னவற்கு அடியேன் அல்லேன்
என்றனன் அறிவின் மிக்கான்.
— கம்பன்.

"நன்று, நன்று" என்று, இடிநகை புரிந்து, ஓங்கி உரத்த தன் கையால் இடி விழுந்தது போலத் தூணில் ஓங்கி அறைந்தான், இரணியன்; தூணைப் பிளந்தான் அரக்கன்.

திசை பிளந்து, அண்டங் கீறி எழுந்து சிரித்தது செங்கண் சிங்கம். நரசிங்கப்பெருமானைக் கண்டான், பிரகலாதன். ஆனந்தக் கூத்தாடினுன்; பக்தி பரவசத்தால் அழுதான். உச்சிமேற் கரங் கூப்பித் தொழுதான்; துள்ளிக் குதித்தான், இறைவன்மேல் உள்ள அன்பால்.

பிளந்தது தூணும் ஆங்கே
பிறந்தது சீயம்; பின்னை
வளர்ந்தது திசைகள் எட்டும்

திரு. ஜி. டி. கோபாலகிருஷ்ண நாயுடு,
கோயம்புத்தூர்

பகிரண்ட முதல் மற்றும்
அளந்தது; அப்புறத்துச் செய்கை
ஆர் அறிந்து அறைய கிற்பார்
கிளர்ந்தது ககன முட்டை
கிழிந்தது கீழும் மேலும்.

— கம்பன்.

சிங்கப்பெருமான் தோன்றினன், தூணிலிருந்து; துளபமாலை யணிந்த நரசிங்கம் நிமிர்ந்து நின்றது. அந்த உக்கிர நரசிங்கத்தின் முகம் கோபத் தீயால் கொழுந்து விட்டெரிகிறது. பயங்கரம்! பயங்கரம்! பார்த்தான் இரணியன். உதட்டை மடித்துச் சினத்தீ உமிழ்ந்து, உயரும் மேரு மலைபோல் நின்ற நரசிம்மத்தைப் பொருது நின்றான். பொங்கியெழுந்து ஆரவாரிக்கும் பாற்கடல் போன்றான் நரசிங்கன். இரணியனை ஒரே கையால் பற்றிக் காலை வாரிச் சுழற்றியடித் தான், நரசிங்கன். சிங்கப்பெரு மான் இரணியனின் வைர மார்பில் கூர்நகங்களை ஊன்றவே, இரத்த வெள்ளம் உலகெங்கும் பரவியது. வயிர மார்பு பிளந்தது. அந்திமாலை யில் அரக்கன் இறந்தான்.

சிங்கப்பெருமான் தோற்றத்தைக் கண்டு எல்லோரும் நடுங்கினர். திரு மகள் வரவே, சிங்கப்பெருமான் உக் கிரம் தணிந்தது; சக்தி வந்ததும் சாந்தி வந்தது.

எம்பெருமான் பக்தன் பிரகலாத னைக் கருணையுடன் நோக்கித் தரு வாய் மலர்ந்தான். 'பிரகலாதா! எப் பிறப்பிலும் உனக்கு நல்லவனுவேன். உனக்கு நான் செய்ய விரும்பியதைக் கூறு'. பிரகலாதன் பகர்கின்றான் :

முன்பு பெறப்பெற்ற பேறே
முடிவில்லை
பின்பு பெறும் பேறும் உண்டோ?
பெறுகுவெனேல்
என்பு பெறாத இழிபிறவி எய்தினும்
நின்
அன்பு பெறு கை அரும்பேறெனக்
கென்றான்.

— கம்பன்.

'இதுகாறும் எல்லையில்லா நன்மை யடைந்தேன். நான் இனிப் பெறும் பேறுமுண்டோ? எலும்பில்லாப் புழு வாய்ப் பிறக்கினும் உன் அன்பு பெற்று வாழும் அரும்பேறு அருளு வாய், பெருமானே, என் நாதனே' என்றான் பிரகலாதன்.

சிங்கப்பெருமான் தன் பக்தப் பிர கலாதனுக்கு சிரஞ்சீவி வரந்தரு கிறான். 'எந்நாளும் உலவுவாய் நீ; என்போல் உளை; மின்னொளி மேனி யன்பா! மூவுலகும் உனக்கு அடிமை' என வாழ்த்துகிறான்.

நல்லறமும் மெய்ம்மையும்
நான்மறையும் நல்லருளும்
எல்லையில் ஞானமும்
ஈறிலா எப்பொருளும்
தொல்லைசால் எண்குணனும்
நின்சொல் தொழில் செய்க
வல்ல உருவொளியாய்
நாளுக வளர்க நீ!

— கம்பன்.

வானவர் அனைவருக்கும் நீ வேந் தன்—நாளுக நீ வளர்க! எண் குணங்களாகிய தீதின்மை, மூப் பின்மை, சாவின்மை, துயரின்மை, பசி யின்மை, வேட்கையின்மை, உண்மை விருப்பு, நினைத்தது நடப்பு என் பவையுடன் என்ஞான்றும் வாழ் வாய், பிரகலாதா! என பக்தன் பிரக லாதனுக்கு நரசிங்கன் முடிசூட்டி னன்.

அன்புச் சித்தனை பிரகலாதன் அரியின் அருளால் மூவுலகாண்டான். பக்த பிரகலாதனை வாழ்த்தி வரம் அளித்த நரசிங்கனைத் திருமங்கையாழ் வார் மனம், மொழி, மெய்யால் அனு பவிக்கிறார்.

இன்துணைப் பதுமத்து அலர் மகள்
தனக்கும்
இன்பன் நற்புவிதனக்கு இறைவன்
தன்துணை ஆயர் பாவை நப்பின்னை
தனக்கு இறை மற்றையோர்க்
கெல்லாம்
வன்துணை; பஞ்ச பாண்டவர்க் காகி
வாயுரை தூது சென்றியங்கும்
என்துணை; எந்தை தந்தை
தம்மானைத்
திருவல்லிக் கேணிக் கண்டேனே.

தன் மனத்திற்கினிய துணையான பெரிய பிராட்டியார்க்கு ப்ரியனும், பூமிப்பிராட்டியாருக்கு வல்லபனும், தன்னையே துணையாகவுடைய நப்பின் னைப் பிராட்டியார்க்கு ஸ்வாமியும், மற்ற எல்லோருக்கும் வலிய துணை யாயிருப்பவனும், பஞ்ச பாண்டவர்க் களுக்காக தூது சென்று, தன் ஸௌலப்யத்தை வெளியிட்டு, என் போல்வார்க்கெல்லாம் ஸகாயபூத னும், என் குலநாதனுமமானவனைத் திருவல்லிக்கேணியில் காணப் பெற் றேன்.

இறுதியாகப் பாடிய பத்தாம் பாசுரத்தையும் நாம் மனமுருகிப் பாடுவோம். களி கூறுவோம்.

மன்னுதண் பொழிலும் வாவியும்
மதிளும்
மாட மாளிகையும் மண்டபமும்
தென்னன் தொண்டையர் கோன்
செய்த நன்மயிலைத்
திருவல்லிக் கேணி நின்றானை
கன்னி நன்மாட மங்கையர் தலைவன்
காமருசீர்க் கலிகன்றி
சொன்ன சொன்மாலை பத்துடன்
வல்லார்
சுகமினி தாள்வர் வானுலகே.

ஆழ்வாரின் அருளிச் செயலைக் கருத்தில் நிறுத்துவோம் :

நித்யமாய்க் குளிர்ந்துள்ள பொழில்களும், நீர் நிலங்களும், மதில்களும், மாடங்களும், மாளிகை களும், மண்டபங்களும், மற்ற நன்மைகளும் உண்டாகும்படித் தொண்டமான் சக்கரவர்த்தியால் சீர்த்திருத்தம் அடைந்ததிருத்தலமே! திருமயிலோடு கூடின திருவல்லிக் கேணியே. இத்தலத்தில் நின்றவன் வேங்கடகிருஷ்ணன். கிருஷ்ணபக வானை அருளொடு பாடிய திரு மங்கையாழ்வான் அருளிச் செய்த சப்தங்களாற் சிறந்த இப்பத்துப் பாட்டுகளையும் பாடிப் பரவசமடை யும் வல்லவர்கள் ஆனந்தமயமான பரமபதத்தைக் கிட்டப் பெறுவார் கள் எனத் திருமங்கையாழ்வார் மங் களாசாசனம் செய்கிறார். நாமும் பார்த்தசாரதியையும் வேங்கடகிருஷ் ணனையும் சிந்தையில் நிறுத்துவோம்.

★

# வால்மீகி திருவுள்ள விளக்கு

## ஸ்ரீ காஞ்சீ காதி அனந்தாசார்யஸ்வாமி அருளிய வால்மீகி பாவ தீபத்தின் மொழிபெயர்ப்பு

இனி இராமசந்திரனுடைய மற்றோர் அனுஷ்டானத்தையும் காட்டுகின்ற வால்மீகி முனிவரால் காயத்ரீ மந்திரத்தின் பொருளாயிருப்பதும் விஷ்ணுவுக்கே என்று ஸூசிக்கப் பட்டதாகிறபடியால் அதன் மூலமாகவும் விஷ்ணுவுக்குப் பரத்துவம் சித்திக்கின்றதென்கிறார் — 'த்யாயந்' என்று தொடங்கும் ச்லோகத்தினால்.

**ச்லோகம் 10 :**

*த்யாயந் ஸந்த்யாதிதேவம் ரகுபதி ரஜபத் ஸம்யகேகாக்ரசேதா:, காயத்ரீம் துஷ்டுவே ச ப்ரணதநிஜசிரா: வாஸுதேவம் ஸுரேட்யம் | இத்தம் வல்மீக ஜந்மா முநிரிஹ கதயந் ஸ்பஷ்டமேவாபிசஷ்டே, காயத்ரீ வேத்யமாத்யம் மதுரிபுமகிலோபாஸிதம் தத்வமக்ர்யம் ||*

**பதவுரை :**

ரகுபதி:=ரகுகுலபதியான இராமன் ஸந்த்யா அதிதேவம்=ஸந்த்யாவந்தனத்திற்கு உரிய தேவதையை, த்யாயந்=தியானம் செய்துகொண்டே, ஏக அக்ர சேதா: ஸந்=ஒரு பொருளையே இலக்காகக் கொண்ட மனத்தையுடையவனாய், காயத்ரீம்=காயத்ரீமந்த்ரத்தை, அஜபத்=ஜபம் செய்தான். ப்ரணத நிஜ சிரா: ஸந்=மிகவும் வணங்கிய தனது தலையையுடையவனாய், ஸுர ஈட்யம்=தேவர்களால் துதிக்கத் தக்க, வாஸு தேவம்=வாஸு தேவனை திருமாலை, துஷ்டுவே ச=துதிக்கவும் செய்தான். இதீத்தம்=என்று இவ்வாறாக, கதயந்=கூறுகிற, வல்மீக ஜந்மாமுநி:=புற்றில் உதித்த (வால்மீகி) முனிவர், மதுரிபும்=மதுவென்னும் அசுரனை யழித்த நாராயண பகவானை, காயத்ரீ வேத்யம்=காயத்ரீ மந்திரத்தினால் கூறப்படுவதும், ஆத்யம்=தனக்கு ஒரு காரணமில்லாததும், அல்லது உலகிற்கெல்லாம் காரணமானதும், அகில உபாஸிதம்=அனைவராலும் உபாஸனம் செய்யப் பட்டதுமான, அக்ர்யம் தத்வம்=மிகவுயர்ந்த தத்துவமாக, (பரம்பொருளாக), ஸ்பஷ்டம் ஏவ=விளக்கமாகவே, அபிசஷ்டே=கூறுகிறார். மதுரிபுவான நாராயணனே காயத்ரீ மந்த்ரத்தால் கூறப்படுகின்ற பரதத்துவமென்று முனிவர் விளக்கமாகவே குறிப்பிடுகிறார் என்றபடி.

**விசேடவுரை :**

ஒவ்வொரு நாளும் எல்லா ப்ராஹ்மணர்களாலும் ஸந்த்யாவந்தனங்களில் ஜபிக்கப்படுகிற காயத்ரீ மந்திரத்திற்கு உள்ளீடான தேவதை பரப்ரஹ்மமே யென்பது அனைவரும் இசைந்த விஷயமே யாகும். 'ஸூர்ய மண்டலத்திலுள்ள பிரசித்தமான பரப்ரஹ்மம் காயத்ரீ மந்த்ரத்திற்கு உள்ளீடான பெரிய தேவதையாகும். அந்த நித்யமான தேவதை எதனால் அறிவிக்கப்பட்டதோ, அந்த காயத்ரீச்சந்தஸ்ஸானது (இருபத்து மூன்றெழுத்துக்களைக் கொண்டதனால்) னிச்ருத்து எனப்படும்' என்றிது முதலிய - காயத்ரியின் தேவதையைக் கூறுகின்ற - விச்வாமித்திரர் முதலியோரின் வசனங்களாலும், காயத்ரிக்குப் பரப்ரஹ்மத்தை அறிவிக்குந் தன்மை குறிப்பாகவன்றி நேராகச் சொல்லாலே சொல்லப்பட்டது. இங்ஙனம் பரப்ரஹ்மத்தை அறிவிக்குமதாக நிச்சயிக்கப்பட்ட காயத்ரீ மந்த்ரத்திற்கு ஏதாவது ஒரு ப்ரமாணத்தில் ஒரு தேவதையை அறிவிக்கு தன்மை சொல்லப்பட்டதாகில், அந்தத் தேவதையே பரப்ரஹ்மமென்று சுற்றி வளைத்துச் சொல்லப் பட்டதாக ஆகும்; பரப்ரஹ்மம் தவிர வேறொருவர்க்கும் காயத்ரியினால் அறிவிக்கப்படும் தன்மை பொருந்தாமையால் காயத்ரியால் அறிவிக்கப்பட்டதாகச் சொல்லப் பட்ட வ்யக்திக்குப் (நபருக்கு) பரப்ரஹ்மாந்தன்மை அவசியமாக இருக்க வேண்டுதலால் என்க. ஆகையால் ஸ்ரீராமாயணம் அயோத்யா காண்டத்தில் நாராயண பகவானுக்கு காயத்ரியினால் அறிவிக்கப்படுந் தன்மை கூறியது அப்பிரானுக்குப் பரப்ரஹ்மத்துவத்தை அறிவிக்கின்றது என்று இங்கு அறியத்தக்கது.

*தமிழாக்கம் :*

**திரு. தி. அ. கிருஷ்ணமாசாரியர்.**

*சிரோமணி வித்வான்*

*திருப்பதி.*

அவ்வாறேயன்றோ ஸ்ரீராமாயணம் அயோத்தியா காண்டம் ஆறும் ஸர்க்கத்தில் - 'பூர்வாம் ஸந்த்யாமுபாஸீந: ஜஜாப யதமாநஸ: | துஷ்டாவ ப்ரணத:சைவ சிரஸா மதுஸூதனம் ||' (இராமன் காலையில் செய்யத் தக்க ஸந்த்யாவந்தனத்திற்குரிய தேவதையை த்யானம் செய்துகொண்டே மனத்தையடக்கி காயத்ரீ மந்த்ரத்தை ஜபித்தான். தலையினால் வணங்கியவனாய் மதுஸூதநனைத் துதித்தான்= உப ஸ்தானம் செய்தான். (6) என்னுமிந்த ச்லோகத்தில் ஸ்ரீராமசந்த்ரன் ஸந்த்யா என்ற சொல்லின் பொருளாய் ஸந்த்யா வந்தனத்திற்குரிய

ஏதோவொரு தேவதையை த்யானித்துக் கொண்டு காயத்ரீ ஜபம் செய்ததும் அந்த ஜபத்திற்குப் பின்பு மதுஸூதனனைத் துதித்ததும் அவனை வணங்கியதும் கூறப்படுகிறது. பொதுவாக உலகில் எந்த மந்திரமானாலும் ஜபிக்கப்படும்போது ஜப காலத்தில் ஜபிக்கப்படும் மந்திரத்திற்கு உள்ளீடான தேவதையின் த்யானமும் ஜபம் முடிந்த பிறகு அந்த தேவதையின் ஸ்தோத்ர (உபஸ்தான)மும் பெரியோர்களின் தொன்று தொட்ட அநுஷ்டானத்தாலும் சாஸ்த்ரங்களாலும் அறியப்பட்டதாகும். இந்த நியமத்தையொட்டியே காயத்ரீ ஜபகாலத்திலும் காயத்ரீயின் உள்ளீடான தேவதையின் த்யானமும் ஜப முடிவில் அந்த தேவதையின் ஸ்தோத்ரமும் செய்தல் தகும். ஸ்ரீராமசந்த்ரன் காலையில் ஸந்த்யாவந்தன ஸமயத்தில் காயத்ரீ ஜபம் செய்யும்போது அதன் உள்ளீடான தேவதையை த்யானம் செய்தமையும், அதன் பின்பு அத்தேவதையை ஸ்தோத்ரம் செய்தமையும் 'ஸந்த்யாம் உபாஸீந:' என்றும், 'துஷ்டாவ ப்ரணத:' என்றும் முறையே முனிவரால் கூறப்பட்டன. அங்கு ஸ்தோத்ர (=உபஸ்தான) ஸமயத்தில் மதுஸூதனனாகிய நாராயண பகவானையே உபஸ்தானம் செய்தமை 'துஷ்டாவ மதுஸூதநம்' என்பதனால் விளக்கமாகக் கூறப்பட்டது. 'ஸந்த்யாம் உபாஸீந:' என்று பொதுவாகச் சொல்லியிருந்தாலும் மேலே 'மதுஸூதநம்' என்று - குறிப்பிட்ட ஒரு தேவதையைக் கூறும் பதத்தைப் பிரயோகித்திருப்பதனால் 'ஸந்த்யா' என்னும் சொல்லும் அத்தேவதையைக் கூறுவதிலேயே முடிவடைகிற படியினால் த்யானம் செய்வதும் அம் மதுஸூதனனையே என்பதும் தேறிற்று. இங்ஙனம் காயத்ரீ ஜபத்திற்குப் பின்பு மதுஸூதன சப்தத்தின் பொருளான நாராயணனை உபஸ்தானம் செய்ததாக இப்படிக் கூறுவது, மதுஸூதனனுக்கு காயத்ரீ மந்த்ரத்தின் உள்ளீடான பொருளாந்தன்மை இல்லாமற்போனால் பொருந்தாததாய்க் கொண்டு அப்பிரானுக்கு காயத்ரீயின் பொருளாயிருக்குந்தன்மையைக் குறிப்பாகக் காட்டுகிறது. ஆக விஷ்ணுவினிடம் காயத்ரீயின் உள்ளீடான தன்மையைக் கூறும் வாயிலாக முனிவரால் விஷ்ணுவுக்குப் பரப்ரஹ்மத்வமே கூறப்பட்டதாயிற்று.

இந்த இரண்டு ச்லோகங்களினால் கூறப்பட்ட பரத்துவம் ஸேவிக்கப்படுந்தன்மை முதலியவை தருமமறிந்தவர்களின் அனுஷ்டானத்தாலும் தேறுகின்றனவென்பதைக் கூறி முடிக்கிறார் 'இத்தம்' என்ற ச்லோகத்தினால்.

ச்லோகம் 11 :

இத்தம் லோகேऽத்ர மாயாத்ருத நரவபுஷம் தர்ம ஸம்ஸ்தாப நார்த்தே, ஸாக்ஷாந் மூர்த்தஞ்ச தர்மம் ரகுகுல திலகம் மாதவைகாந்த பக்தம் | வ்யாசக்ஷாணோ முநீந்த்ர: ஸ்புடயதி ஸுதியாம் ஸ்ரீபதிம் ஸேவநீயம், ஸித்தம் தர்மப்ரமாணே முநிபரிகணி தேஷ்வாதிமே ஸர்வ மாந்யே||

பதவுரை :

இத்தம்=கீழிரண்டு ச்லோகங்களில் கூறியபடி, அத்ர லோகே=இந்த மனிதவுலகில், தர்ம ஸம்ஸ்தாபந அர்த்தே=தருமத்தை நிலைநாட்டுதலாகிய பயனுக்காக, மாயா த்ருத நரவபுஷம்=தனது ஸங்கல்பத்தால் தாங்கப் பெற்ற மனிதவுடலை உடையவனும், ஸாக்ஷாத் மூர்த்தம் ச தர்மம்=நேராக உருக்கொண்ட தருமமானவனும், ரகுகுலதிலகம்=ரகுவின் குலத்திற்குத் திலகம் போன்றவனுமான இராமனை, மாதவ ஏகாந்த பக்தம்=திருவின் மணாளனொருவனிடமே பக்தியையுடையவனாக, வ்யாசக்ஷாண:=சொல்லுகிற, முநீந்த்ர:=வால்மீகியாகிய முனிவர் பெருமான், ஸ்ரீபதிம்=திருவின் மணாளனாகிய விஷ்ணுவை, முநி பரிகணிதேஷு=ஆபஸ்தம்ப முனிவரால் எண்ணப்பட்டவற்றில், ஆதிமே=முதலானதும், ஸர்வ மாந்யே=அனைவராலும் மதிக்கத் தக்கதும், தர்ம ப்ரமாணே=தரும விஷயத்தில் அத்தாட்சியுமான சிஷ்டாசாரத்தில், ஸித்தம்=தேறின, ஸுதியாம் ஸேவநீயம்=நல்லறிவுடையோர்க்கு வணங்கத்தக்கவனாக, ஸ்புடயதி=ஸ்பஷ்டமாக்குகிறார்.

விசேடவுரை :

தர்ம ஸம்ஸ்தாபநமாவது தாய் தந்தையர்களின் சொல்லைக் கேட்டல் முதலிய பொதுவான தருமத்தையும் தஞ்சம் புகுந்தாரைக் காத்தல் முதலான விசேஷ தருமத்தையும் நிலைநாட்டுதலாகும். இதனால் 'நல்லோரைக் காப்பதற்காகவும் தீயோரை அழிப்பதற்காகவும் தருமத்தை நன்கு நிலைநாட்டுதற்காகவும் ஒவ்வொரு யுகத்திலும் நான் பிறக்கிறேன்' (4-8) என்ற பகவத் கீதாவசனம் நினைவூட்டப்படுகிறது. மாயாத்ருத நரவபுஷம்—'மாயா வயுநம் ஜ்ஞாநம்' (யாஸ்க நிருக்தம் - தர்மவர்க்கம் 22) மாயா வயுநம் என்ற சொற்கள் ஜ்ஞானத்தைக் குறிப்பன - என்று மாயா சப்தம் ஜ்ஞானத்தைக் கூறுமதாகப் படிக்கப்பட்டுள்ளதனால், ஜ்ஞானத்தில் ஒரு வகையான ஸங்கல்பமே இங்கு மாயா என்ற சொல்லால் கருதப்பட்டது. அத்தகைய ஸங்கல்பத்தாலே மனிதவுடலோடு ஒத்ததாக மாற்றப்பட்ட (தனது) திவ்யமான திருமேனியையுடையவன் என்று பொருள். தனது ஸங்கல்பமொன்றுக்கே வசப்பட்டதாய் நல்வினை தீவினைகட்கு வசப்படாததான மனிதவுடலைக் கொண்டவனென்பதுதேர்ந்த கருத்து. இதனால் 'எனக்கே உரியதான அப்ராக்ருத திருமேனியை மேற்கொண்டு எனது மாயையினால் (ஸங்கல்பத்தினால்) பிறக்கிறேன்' (கீதை 4-6) என்ற ஸ்ரீஸூக்தியின் பொருள் குறிப்பாகக் காட்டப்பட்டது. ஸாக்ஷாத் மூர்த்தம் ச தர்மம்— 'இராமபிரான் உருவம் கொண்ட தருமமாவான்' (இராமா. ஆர. 37-13) என்று கூறியபடி, உடலோடு

கூடிய தரும ஸ்வரூபனானவன் என்று பொருள். 'க்ருஷ்ணனை நித்யமான தருமமாக அந்தணர்கள் கூறுகிறார்கள்' (பாரதம்-வன 48-26) என்பது போல, உலகத்திலுள்ள செல்வம் மக்கள் மழை மாடு முதலிய பயனல்லாத—வேதத்திற் கூறிய ஸ்வர்க்கம் கைவல்யம் மோக்ஷம் முதலான எல்லாப் பயனுக்கும் கருவியாகையாலே தரும சப்தத்தினால் கூறப்படுகின்ற பரப்ரஹ்மமே இராமபிரானாக அவதரித்துள்ளதென்று கருத்து. இவ்வடைமொழிகள் இரண்டினால்—ஸாக்ஷாத் தர்ம ஸ்வரூபனாகவும் உபதேச - அனுஷ்டானங்களின் மூலம் தருமத்தை நிலைநாட்டுதற்காக அவதாரம் செய்தவனாகவும் இருப்பதனால், 'உனக்கு வைதிக கருமத்திலோ, வேதத்தில் காணாதவையாய்ப் பெரியயோர்களின் ஆசாரத்தில் உள்ள வஸந்தோத்ஸவம் முதலியவற்றிலோ ஸந்தேகம் உண்டானால், அவ்விரண்டிலும் ஆராய்ச்சி செய்ய வல்லவர்களும் வேத சாஸ்திரங்களில் ப்ரீதியுடையவர்களும் லௌகிக காரியங்களில் வல்லவர்களும் கோபம் உலோபித்தனம் முதலிய கெட்ட குணங்களில்லாதவர்களும் தருமத்தில் ஆசையுடையவர்களுமான வேத மோதிய ப்ராஹ்மணர்கள் முற்கூறிய அவ்விரண்டினுள் எப்படி இருக்கிறார்களோ அப்படியே நீயும் இருக்கக் கடவாய்' (தைத்-சீக்ஷா 11) என்று கூறியபடியே ஸ்ரீராமசந்த்ரனுடைய அனுஷ்டானத்தில் தேறிய செயல்களே வைதிக தருமத்தில் ஊன்றிய அனைவராலும் பின்பற்றத் தக்கன என்பது நன்கு அறியப்பட்டதாகிறது. ரகுகுலதிலகம்—ரகு மகாராஜனின் குலத்தில் உதித்தவர்கள் தருமத்தையே முக்கியமாகக் கொண்டவர்களாகையால் அக்குலத்தில் உதித்த இராமபிரானால் அனுஷ்டிக்கப்பட்ட செயல் மிகவும் நம்பத் தகுந்ததென்று கருத்து. முநிபரிகணி தேஷு ஆதிமே தர்ம ப்ரமாணே — ஆபஸ்தம்பமுனிவர் 'தரும மறிந்தவர்களின் அனுஷ்டானம் (நமக்கு) அத்தாட்சியாகும், வேதங்களும் அங்ஙனமே' (ஆபஸ்தம்ப தர்ம ஸூத்ரம் 1-1) என்று தருமத்தில் அத்தாட்சியாக உள்ளவற்றை எண்ணும்போது தருமமறிந்தவர்களின் அனுஷ்டானத்தையே முதன் முதலாகக் குறிப்பிட்டுப் பின்பு வேதங்களைக் குறிப்பிட்டார். இங்ஙனம் குறிப்பிடுகின்ற அம்முனிவர்—வேதப் பொருளை இன்னதென்று நிச்சயிக்க வல்லமையில்லாத நம் போல்வார்க்கு மனுமுதலான தரும மறிந்த பெரியோர்களின் அனுஷ்டானமே தருமத்தை நிச்சயிப்பதில் தஞ்சமென்று கருதுவதாகத் தெரிகிறது. இல்லையேல் வேதங்களையே முதன் முதலாக அவர் குறிப்பிட்டிருப்பர் அல்லவா? ஸர்வமாந்யே—முற்காட்டிய தைத்திரீய ச்ருதியாலும் மற்றுமுள்ள ஸ்ம்ருதிகளாலும், தருமமறிந்த நல்லோர்களின் அனுஷ்டானம் எல்லோராலும் பின்பற்றத் தக்கதென்று உபதேசிக்கப்படுகிறதன்றோ? ஸ்புடயதி—சிஷ்டானுஷ்டானத்தாலும் திருமகளின் மணவாளனை விஷ்ணுவே நல்லோர்களால் வணங்கத் தக்கவனென்று தேறியதாக வால்மீகி முனிவர் ஸ்பஷ்டமாக்குகிறாரென்று கருத்து. தாய் தந்தையர்களின் சொல்லைக் கேட்டல் முதலிய சாதாரண தருமங்களிலும் சரணம் புகுந்தவர்களைக் காத்தல் முதலிய சிறந்த தருமங்களிலும் ஊற்ற முள்ளவனும் தருமத்தை நிலை நாட்டுதற்காகவே அவதாரம் செய்தவனும் தனது அனுஷ்டானத்தால் தருமமனுஷ்டிக்க வேண்டிய விதத்தை வெளிப்படுத்த விருப்பமுள்ளவனும் தருமத்தையே முக்கியமாகக் கருதும் ரகுகுலத்தில் உதித்தவனுமான ஸ்ரீராமசந்திரனுக்கு பகவானை நாராயணனிடத்திலேயே நிறைந்த பக்தியுள்ளதாகத் தெரிவதனால், மற்ற எல்லோராலும் அப்பெருமானே ஸேவிக்கத் தக்கவனென்பது முடிந்ததென்று கருத்து.

இவ்வாறாக அயோத்தியாகாண்டத்திலுள்ள காரணங்களைக் கூறி, இனி ஆரணியகாண்டத்திலுள்ள காரணத்தைக் கூறுகிறார் 'க்ருத்ராதீசாய' என்றாரம்பிக்கும் ச்லோகத்தினால்.

ச்லோகம் 12 :

க்ருத்ராதீசாய லோகாநதிசதபுநராவர்த்திநோ ராகவாத்மா, சார்ங்கீத்யாரண்யகாண்டே முநிரநுகதயந் மோக்ஷதத்வம் முராரே: | பக்ஷே வ்யாப்யஸ்ய ஸத்த்வம் கமயதி நியதம் வ்யாபகஸ்யாபி ஸத்தாம், இத்யேதந்ந்யாயத: ஸ்மஸ்புடயதி பரமம் ப்ரஹ்ம நாராயணம் தம் ||

பதவுரை :

ராகவாத்மா=ரகுகுலராமனுருவங் கொண்ட சார்ங்கீ=சார்ங்க வில்லேந்தும் விஷ்ணு, க்ருத்ர அதீசாய=கழுகரசனான ஜடாயுவுக்கு, அபுநராவர்த்திந: லோகாந்='முக்தி பெற்றவன் மறுபடியும் திரும்பி வருதலில்லை' (ச்சாந்தோக்யம் 8-15-1) என்பது முதலியவற்றால் கூறப்பட்டபடி திரும்பி வருதலில்லாத—பரமபதம் பரந்தாமம் என்றிது முதலான சொற்களால் குறிக்கப்பட்ட வைகுண்டமென்னும் லோகங்களை, அதிசத்=கொடுத்தார், இதி=என்றிவ்வாறாக, முராரே:=முராசுரனைத் தொலைத்த விஷ்ணுவுக்கு, மோக்ஷதத்வம்=முக்தியளிக்குந்தன்மையை, ஆரண்ய காண்டே=ஆரணிய காண்டத்தில், அநுகதயந்=சொல்லுகிற, முநி:=வால்மீகி முனிவர், பக்ஷே=பொருளின் ஸந்தேஹமுள்ள இடத்தில், வ்யாப்யஸ்ய ஸத்த்வம்=அப்பொருளோடு இன்றியமையாத ஹேதுவின் (காரணத்தின்) உண்மையானது, வ்யாபகஸ்ய ஸத்தாம்=ஹேது இருக்குமிடத்திலே இருந்தே தீர வேண்டிய பொருளின் உண்மையை, நியதம் ஜ்ஞாபயதி=நிச்சயமாக அறிவிக்கின்றது, இதி ஏதத் ந்யாயத:=என்கிற இந்த தருக்க நூற் சட்டத்தின்படி, தம் நாராயணம் = பிரசித்தனை நாராயணனை, பரம்ப்ரஹ்ம=பரப்ரஹ்மமாக, ஸ்புடயதி=வெளிப்படுத்தினார்.

ஓரிடத்தில், நிச்சயிக்க வேண்டிய பொருளை விட்டுப் பிரியாததொரு தருமத்தின் உண்மையை அறிதலென்பது அந்தத் தருமமுள்ள இடத்தில் இருந்தே தீர வேண்டிய பொருளின் உண்மையறிதலை உண்டாக்குமென்னும் நூல் வழக்கின்படி, பரப்ரஹ்மத்துவத்தை விட்டுப் பிரியாத தருமமாகிய முக்தியளிக்குந்தன்மை விஷ்ணுவினிடம் கூறப்படுவதனால், அவ்விஷ்ணுவுக்குப் பரப்ரஹ்மத்துவம் சொல்லப்பட்டதாகவே ஆகுமென்பது கருத்து. (தொடரும்)

# தன்னையே சுட்ட தன்வினை

**'மயூரப்ரியா'**

அசுரர்கள் தீய குணங் கொண்டவர்கள். நற்குண நற்செய்கைகளே அவர்களுக்குப் பிடிக்காதவை. சிறப்புமிக்க சுரர் (தேவர்)களும் நரர் (மானிடர்)களும் அவர்களின் விரோதிகளென்று கருதி வந்தனர். எதையும் எண்ணித் துணியமாட்டார்கள். பின் விளைவுகளின் விபரீதத்தையும் கருதாதுத் துன்மார்க்கங்களில் நடப்பதிலேயே நாட்டங் கொண்டவர்களாயிருந்தனர். தன்வினையே தன்னையழித்தது என்பதனை விளக்கும் ஓர் இனிய கதை இதோ!

க்ஷீராப்தி ஸயனனுன ஸ்ரீமந் நாராயணன், ஆன்மாக்களின் நற்கதி கருதி அர்ச்சாவதாரம் மேற்கொண்டு, ஸ்ரீ கிருஷ்ணவதாரம் எடுத்தான். தீனதயாளன், கருணைக்கடல்! சரணுகதவத்ஸலன்! 'அபயம்' என்றழைத்த அளவில் கஜேந்திரனையும் திரௌபதியையும் காப்பாற்றியவராச்சே!

'ஹே கோபாலக! ஹே க்ருபாஜலநிதே! ஹே ஸிந்து கன்யாபதே!
ஹே கம்ஸாந்தக! ஹே கஜேந்த்ர கருணுபாரீண! ஹே மாதவ!
ஹே ராமாநுஜ! ஹே ஜகத்ரயகுரோ! ஹே புண்டரீகாக்ஷமாம்
ஹே கோபி ஜநநாத! பாலய பரம்ஜாநாமிந த்வாம் விநா!

என்று குலசேகராழ்வார் அநுபவிக்கிருரல்லவா!

ஸ்ரீ ருக்குமணி சத்யபாமா ஸமேத ஸ்ரீ கிருஷ்ணர், தமது லீலா விநோத ஆடல்களைத் திருவருள்பாலித்த பின்பு, துஷ்ட நிக்ரஹ சிஷ்ட பரிபாலனம் நிறைவேற்றியருளினுர். ஸ்ரீ கிருஷ்ணருக்கு ருக்குமணியிடம் பிறந்தவன் பிரத்தியும்னன். பிரத்தியும்னன் பிறந்தவுடனே, சம்பரன் என்ற ஒரு அசுரன் அந்த சிசுவைத் திருடிப்போய்க் கடலில் போட்டுவிட்டுத் திரும்பினுன். இப்போதுதான் சம்பரன் வினைவிதைத்தான்! கடலிலிட்ட சிசுவைக் கடலிலுள்ள ஓர் மகரம் (பெரிய மீன்) எடுத்து விழுங்கியது. சில தினங்களில் ஒரு வலைஞன் (மீனவன்) வீசிய வலையில் அந்த மகரம் சிக்கிக் கொண்டுவிட்டது. மகிழ்ச்சியுற்ற அவ்வலைஞன் அந்த மகரத்தை எடுத்துப்போய் சம்பரனிடம் கொடுத்துப் பெருந்தொகையினைப் பெற்றுச் சென்ருன். மகரத்தைச் சம்பரன் ஏற்றுக் கொண்டுத் தன் மனைவி மாயாவதியிடம் தந்து, உணவாக்குமாறு பணித்தான். மகரத்தை மாயாவதி வகிர்ந்தாள். அதனுள் சிசு (பிரத்தியும்னன்!) இருக்கக் கண்டாள் மாயாவதி!

மகரத்தை வகிர்ந்ததும் அதிசௌந்தர்யமான சிசு வெளிப்பட்டதும், சம்பரனின் மனைவியான மாயாவதி, கண்ணுங்கருத்துமாக அந்த சிசுவை வளர்த்து வந்தாள். ஒருத்தி மகனுய்ப் பிறந்தான் கண்ணன்; ஒருத்தி மகனுய் வளர்ந்தான்! அது போலவே, பிரத்தியும்னனும் ருக்குமணி வயிற்றில் சனித்து, மாயாவதியிடம் வளர்ந்து வந்த காலை, சம்பரன்தான் தன்னைக் கவர்ந்துக் கடலிலிட்டானென்றறிய வந்து, சம்பரனைக் கொன்று, மாயாவதியுடன் தன் தந்தையின் இல்லம் வந்து சேர்ந்தான்.

பிரத்யும்னன் சம்பராரி எனவும் பெயற் பெற்ருன். மன்மதனுக்கே சம்பராரி என்று பெயருண்டென்றும், எனினும் பிரத்யும்னன் மன்மதனின் அம்சமாதலின் சம்பராரி என்று பெயர் கொண்டான் என்பர்.

தன்வினை, தன்னையே சுட்டுவிட்டதென்பதற்கு சம்பரன் வரலாறு ஓர் எடுத்துக்காட்டாகும்!

12-ம் பக்கத் தொடர்ச்சி

லிருந்துதான் ஸ்ரீதேவியானவள் பூமி தேவியாக மார்க்கண்டேய மகரிஷிக்கு புத்திரியாக வளர்ந்து துளசி கொண்டு ஆராதனை செய்து பெருமாளை அடைந்தாள்.

புராணப் பெருமை :

1. ஸ்காந்தத்தில் அம்பிகையானவள் துளசியினுல் சிவபெருமானை பூசித்து அவர் சீற்றத்தை தவிர்த்தாள்.

2. பதிவிரதைகளைக் காக்கும் தெய்வமே துளசியாகும். "ஜலந்தரன் மனைவி பிருந்தை, தன் கணவன் விஷ்ணுவால் சம்ஹாரம் செய்ததை அறிந்து உடன்கட்டை ஏறித் துளசிச் செடியாக ஆனுள்"

3. மகாலெட்சுமியின் அம்சமே துளசி.

விஞ்ஞானக் கருத்து :

சிவனுக்கு உரியது வில்வம்—இது குளிர்ச்சியை தருவது—சிவனுக்குரிய இடமும்தேகமும்ஒளி பொருந்தியிருக்கும். ஆகவே உஷ்ணத்திற்கு ஏற்ற உரிய பொருளாக வில்வம் அமைந்துள்ளது.

விஷ்ணு — இவர் திருப்பாற்கடலில் பள்ளி கொண்டுள்ளார் — உரிய இடம் குளிர்ச்சியாக இருப்பதால் அதற்கேற்றுற்போல் உஷ்ணத்தைக் கொடுக்கத் துளசியினை அவர் ஏற்றருளுகின்ருர்.

விஷ்ணுவுக்கு உரிய சங்குமணி — குளிர்ச்சித் தன்மையும், துளசிமணி— உஷ்ணத் தன்மையும், தாமரைமணி- குளிர்ச்சியையும் உஷ்ணத்தையும் சமமாக தருவது. ஆகவே இதனை ஏற்றுள்ளார்.

மருத்துவத்தில் துளசி முக்கிய பங்கு வகிக்கிறது.

" ஐயம் வயிற்றுளைச்சல் அத்திசுரம் தாகமும் போம்,
பைய சுரமாந்தம் பறக்குங்காண்— மெய்யா
வாயின் அரோசகம்போம் வன்காரஞ் சூடுள்ள
தூய துளசிதனைச் சொல்"

என்று பதார்த்த குண சிந்தாமணி விளக்குகிறது.

இத்தகைய சிறப்பு வாய்ந்த துளசியைப் போற்றி நம் வாழ்க்கையின் உயர்ந்த இலட்சியத்தினை இதன் மூலம் அடைய முயலுவோமாக. ✠

# வேதமே இராமாயணம்!

‘வேதங்களினுல்தான் பரமனே உணரலாகும். அப்பரமனே இராமனுக அவதரித்தபோது வேதமே வால்மீகி முனிவரால் இராமாயணமென்னும் காப்பியமாக அவதரித்தது’ என்று ஒரு சுலோகம் உணர்த்துகிறது. வேதம் என்ருல் என்ன என்பதை அறிந்தால் பரமனின் பெருமையை ஒருவாறு உணரலாம். அதை உணர்ந்தால் இராமாயணத்தின் உட்பொருளை-கருப்பொருளை நாம் உணரலாம்.

‘வேதோகிலோ தர்ம மூலம்’ தர்மங்கள் அனைத்திற்கும் வேதமே ஆதாரம். ‘வேதைஸ்சஸர்வைரக மேவ வேத்ய:’ ‘எல்லா வேதங்களினுலும் நானே அறியத் தக்கவன்’ என்று கண்ணன் உபதேசம் செய்துள்ளான். எனவே, வேதத்தை உணர்ந்தால் தர்மத்தை உணரலாம் என்பதாகும்.

---

நடாதூர் விஜயராகவாசாரியார்,
சென்னை.

---

தர்மம், ஞானம் என்னும் இரண்டும் நமக்கு இரு கண்களைப் போன்றன. ‘தமேவ விதித்வா அதிமிருத்யுமேதி, நான்ய: பந்தா வித்யதே அயனுய’ - பரமனையறிந்தால்தான் அழிவுருவாகிய இம்மையைக் கடந்து உய்வு பெறலாம். அழியாத பேரின்ப நிலைபெற வேறு வழியில்லை’ என்று உணர்த்துகிறது வேதம்.

‘தர்மம்’ என்ற சொல்லுக்குப் பல பொருள்களுண்டு. அவற்றில் தலையாயது உலகத்தைத் தரிப்பது அதாவது நிலை நிறுத்துவது தர்மம் எனப்படும். ‘த்ரியதே இதி தர்ம:’ எது எந்தப் பொருளின் இருப்புக்குத் தலையாய காரணமாகிறதோ அதுவே அதற்குத் தர்மமாகும். தருமம் நிலையானதல்ல. எப்பொழுதும் மாறிக் கொண்டே இருக்கும். செயல்படுவது தர்மம். செயல் நடந்து கொண்டிருக்கும்போது வினையாகவும் அது முடிந்து பயன்பெறும் போது பொருளாகவும் ஆகிறது. எடுத்துக் காட்டாக மண் நீர் முதலிய பொருள்கள் கலந்து பல செயல்களுக்கு இலக்காகி முடிவு பெறும்போது ‘பானை’ என்னும் பொருளாகிறது. எனவே தான் பெயர்ச் சொற்கள் பெரும்பாலும் ஏதேனும் ஒரு வினையைச் சார்ந்தே தோன்றின என்பது இங்குக் குறிப்பிடத்தக்கது. பிறத்தல் இருத்தல் மாறுபடுதல் அடைதல் வளர்தல் குறைதல் அழிதல் என்னும் செயல்களைக் கொண்டதே உலகமும், அதில் நாம் காணும் பொருள்களும். இப்பொருள்கள் அனைத்தும் ‘தர்மம்’ எனப்படுகிறது. எனவே இதற்கு ‘அஸத்’ நிலையற்றது என்பது பெயராயிற்று. ஏதேனும் ஒரு செயல் செய்யப்படுவதற்கு ‘அறிவு’ தேவை. மண் நீர் முதலியன எந்த அளவில் எவ்வாறு சேரவேண்டுமோ அந்தப் பொருள்களுக்குத் தெரியாது. வேறு ஒரு ‘அறிவு’ அவற்றைத் தக்கபடி சேர்த்து இயக்குவதால்தான் பானை உண்டாகிறது. அந்த அறிவு பானை தோன்றுவதற்கு முன்பாக இருக்க வேண்டும். பானையின் இருப்புக்கும் அது காரணமாகும். அதை அழிப்பதும் அதன் செயலே. மறுபடியும் வேறு பானையை உண்டாக்குவதும் அதுவே. அதைப்போல இந்த உலகங்களைப் படைத்த ‘அறிவு’ உலகங்கள் தோன்றுவதற்குமுன்பே இருந்து உலகத்தை நிலை நிறுத்தி முடிவில் சிதைத்து விடுகிறது. மறுபடியும் முன் போலவே உலகங்களைத் தோற்றுவிக்கிறது. எனவே அந்த அறிவு நிலையானது, குறையாதது, அழிவில்லாதது. அதுவே பிரும்மம் எனப்படுவதுமாம்.

உண்மையில் உலகமும், பிரும்மமும் வேறு வேறல்ல. ‘அம்ருதஞ்சைவ மிருத்யுஸ்ச ஸதஸத்சாக மர்ஜுன’ ‘அர்சுனு! அம்ருதம் அதாவது அழிவற்றதாகிய ‘ஸத்’ என்பதும் அழிவு பெறக் கூடிய ‘அஸத்’ ஆகிய பிரகிருதியும் நானே’ என்பது கண்ணனின் அருள் வாக்கு.

“விதந்தி ஏபி: தர்ம ப்ரும்ஹணீ க்ரியா ஞான மயம் ப்ரம்ஹவா இதி வேத:’ இந்த வேதங்களால் செயல் உருவமாகிய தர்மமும் ஞான உருவமாகிய பிரும்மமும் அறியப்படுகின்றன. ஆகையால் ‘வேதம்’ என்று பெயராயிற்று. ‘வித்’ என்னும் வினையை அடிப்படையாகக் கொண்டு ‘வேதம்’ என்ற சொல் தோன்றியது. இந்த சொல்லுக்குப் பல பொருள்கள் உண்டு. சிலவற்றை இங்குக் காண்போம்.

‘வித்-ஞானே’ என்பதால் ஞானம் என்றும்,

‘வித் - விசாரணே’ என்பதால் ஆராய்ச்சி என்றும்,

‘வித் - ஸத்தாயாம்’ என்பதால் ‘ஸத்தா’ நிலையாக இருப்பது என்றும், ‘வித்-லாபே’ என்பதால் இலாபம் கிடைப்பது என்றும் வேதத்திற்குப் பொருளாகும்.

இப்பொருள்களில் ஞானம் ஆராய்ச்சி என்பன இரண்டும் சொல் வடிவமான ருக்-யஜுர்-ஸாம-அதர்வண வேதங்களைக் குறிக்கும். மற்ற ஸத்தா, இலாபம் என்பன இரண்டும் பொருள் வடிவமான இவ்வுலகத்திற்கு ‘வேதம்’ என்ற பெயர் உண்டு என்பதைக் குறிக்கும்.

(44-ம் பக்கம் பார்க்க)

# வராஹ நாயனர் ★

திரு. வி. இராகவன்,
பள்ளத்தூர்.

செடி ஒன்றை நட்டவன் நாள் தவருது தண்ணீர் ஊற்றி, இளந் தளிரை ஆடு மாடு வாய் வைத்து விடாது தக்க வேலியமைத்து, கொழுந்து வாடும் நிலே காணில் தக்க மருந்தும் உரமும் இட்டு அதனைக் கண்ணுங்கருத்துமாய்க் காத்து வருவான். தான் வைத்துண்டாக்கிய செடியது: அது தன் உடைமை என்னும் எண்ண மிகுதிதானே அதற்குக் காரணம். 'மரம் வைத்தவன் தண்ணீர் ஊற்றுவான்' என்னும் சொல் இதிலிருந்து தோன்றிய போதிலும் உலகைப் படைத்திட்டவன் அதிலுள்ள ஜீவன்களேயும் காப்பாற்றுவான் என்பதையும் காட்டுவதாயிற்று. கண்ணீர் காணச் சகியாத திருமால் தேவர்களின் கண்ணீரைத் துடைக்கத்தான் கையிலே நீர் ஏற்ருன். ஆம். நாட்டை மஹாபலியிடம் பறி கொடுத்துவிட்டு, இருக்க நிழலின்றித் தேவர்கள் திருமாலேச் சரணமடைந்தனர். "அலம்புரிந்த நெடுந்தடக்கை" (திருநெடுந்தாண் 6) எனப்போதும் போதும் என்னும்படி வாரி வழங்கும் தன் அழகிய திருக் கரத்திலே நீரேற்று மஹாபலியிடம் மூவடி மண்யாசித்தான். வாமனனுய்த் தான் யாசித்ததைத் திருவிக்கிர மனனுய்த் தன் திருவடியாலே மண்ணேயும் விண்ணேயும் அளந்து அவர்கள் நாட்டை மீட்டுக் கொடுத்தான். பிரளய வெள்ளத்திலே மூழ்கி அழியவிருந்த இப்பாரினேக் காப்பாற்ற, அது தன்னேக் காப்பாற்ற வேணும் என்று கேளாத நிலேயிலும், அதனே விழுங்கித் தன் வயிற்றிலே வைத்திருந்து, பிரளயாபத்துக் கழிந்த வாறே, தன்னே வெளியே விட வேண்டும் எனக்கோராத வளவிலும், அதனே வெளியே விட்டான். இவற்ருல் உலகங்களேப் படைத்திட்டதோடு தன் பொறுப்புக் கழிந்தது என்றில்லாமல் அவற்றிற்கு ஏற்படும் எல்லாவாபத்துக்களினின்றும் காப்பாற்ற வேணும் என்றும் அவனுடைய ரக்ஷகப்பாரிப்பு ஒளிவிட்டுப் பிரகாசிக்கிறது.

வலிமை மிக்கவனுன இரணியாக்ஷன் என்னும் கொடிய வரக்கன் இப் பரந்த பூமியைப் பாயாகச் சுருட்டிக் கொண்டு கடலினுள் மூழ்கி மறைந்து விட்டான். வாழ வைக்கவல்ல இப் பாரினே இழந்தோமேயென வருந்திய தேவர்களும் ரிஷிகளும் ஆபத்திலே கை கொடுப்பவனுன திருமாலேச் சரணமடைந்தனர். அவனும் இவர்களது துயர்களேய உறுதி பூண்டான். இது புராண வரலாறு.

பூமிப் பிராட்டி திருமாலின் பிரிய நாயகியல்லவா? அவளோ இப்பாரினேத் தன் சரீரமென அபிமானித்திருப்பவள். பார் மகள் என்றும் மடந்தையென்றும் பூமிப் பிராட்டி என்றும் இப்பாரினேக் கொண்டே சிறப்பித்து அழைக்கப் பெறுகிருள். இவ்வாறு பூமிப் பிராட்டிக்குப் பிரியமான இப்பூமியையல்லவா இரணியாக்ஷன் சுருட்டிக் கொண்டு சென்றது. ஆகவே "மாதர் மண் மடந்தை பொருட்டு" (திருவாய் 4-2-6) எனத் தன் பிரிய நாயகியின் காரியமாக மீட்டுக் கொண்டு வரத் தீர்மானித்தான். "பாசி தூர்த்துக் கிடந்த பார் மகள்" (நாச். திருமொ. 11.8) என நீண்ட காலம் நீரினுள் கிடந்ததால் பாசி படர்ந்து அழுக்கேறிக் கிடந்தது இப்பூமி! இவ்வாறு பூமி அழுக்கடைந்து கிடப்பது தன் பிரிய நாயகியான பூமிப் பிராட்டியே தன்னேப் பேணுது அழுக்கடைந்து கிடப்பதாகத் தோன்றுகிறது அவனுக்கு! 'மலரின் மலர்ச்சியும் சுகுமாரதையும் தெய்வத் தன்மையும் நிறையப் பெற்ற மணத்தால்' (ஸர்வ க³ந்த⁴: (சர்வ கந்த:) எனப்பரிமளிக்கும் அவன் தன் நாயகி தன்னேப் பேணுது கிடக்கையில் தான் மட்டும் மணமுள்ளவனுகத் திகழுவது தகுமோ? ஆகவே தானும் "மாசுடம்பில் நீர் வாராமானமிலாப் பன்றியாய்" (நாச் திருமொ. 11.8) எனத் தன் தேகத்தில் சேறும் சகதியும் அப்பிக்கிடக்க அதினின்றும் நாற்றம் மிகுந்த நீர் வடிந்து கொண்டிருக்க நீருக்கும் சேற்றுக்கும் அஞ்சாத பன்றி யுருவை விருப்பத்தோடு எடுத்துக் கொண்டான்! உள்ளிருக்கும் மாசை நீக்க முடியாது வெளியழுக்கை ஓர் செம்பு நீர் கொண்டு கழுவிக்கொள்ளும் மானிட சாதிக்கும் கீழான ஓர் பிறவியை மிகவினியதாக வெடுத்துக் கொண்டான்.

கர்மம் காரணமாய் நமக்கேற்பட்டதே இம்மானுடப் பிறவி. 'பிறப்பிலி' என்னும் பிறப்பற்றவனுன திருமால் தன் இச்சையாய் அடியார்க்காகத் தன்னேத் தாழ்த்திக் கொண்டு பல பிறவிகள் எடுக்கிருன். அவனுடைய கருணேயையல்லவா இது எடுத்துக் காட்டுகிறது. இவ்வாறு தான் தோன்றுவதோடு தன் தெய்வத் தன்மையையும் வாசனேயோடு போக்கிக் கொண்டுதோன்றுகிருன். உலகோரின் அழுக்குடம்பைக் கழிக்கும் அவன் தானே அவ்வழுக்குடம்பு சாதியில் தோன்றுகிருன்! "பன்றியாம் தேசுடைத் தேவர்" (நாச். திரு. 11.8) என்றவாறு அவன் பிறக்கப் பிறக்க அவன் நீர்மைக்குணங்கள் எல்லாம் ஒளிவிட்டுப் பிரகாசிக்கின்றன. 'மனப்பரிப்போடு அழுக்கு மானிட சாதியில்தான் பிறந்து தனக்கு வேண்டுருக் கொண்டு' (திருவா. 6-4-7) என அடியார் படு துயர் தாங்காது பொங்கும் பரிவாலே அந்தந்த நிலேமைக் கேற்றவாறு மீனுகவும் ஆமையாகவும் பன்றியாகவும் மனிதனுகவும் தோன்றுகிருன்.

நாட்டுப் பன்றிக்கும் தான் கொண்ட வராஹரூபிக்கும் யாதொரு

வேறுபாடும் காண முடியாதவாறு தோன்றினன். பரமரசிகரான வியாக்யானச் சக்ரவர்த்தி பெரியவாச்சான் பிள்ளையனுபவித்து அருளும் இனிமையான சூக்தி காண்போம்:

“மாயா ம்ருகத்தைக் கண்டு அல்லா ம்ருகங்களும் மோந்து பார்த்து வெருவி ஓடின விரே; அப்படியின்றிக்கே ஸஜாதீயங்களும் மோந்து பார்த்தும் ‘நம் இனம்’ என்று மருவும் படியாய்த்து ஈஸ்வராபிமானம் வாஸனையோடே போனபடி’ என்பது. சீதையைக் கவர்ந்து செல்ல வேண்டுமென்னும் தீயவெண்ணம் கொண்ட இராவணனின் தூண்டுதலால் மாரீசன் என்னு மரக்கன் மாயமானாகவுருவெடுத்துச் சீதை முன்னே தோன்றினன். இம்மானைக் கண்டு அங்குள்ள மான்கள் இதை முகர்ந்து பார்த்தன. இது நம் இனம் இல்லையென்றுணர்ந்து பயந்தோடின. இவ்வாறில்லாமல் மற்றப் பன்றிகளும் இதனை முகர்ந்து பார்த்து இது நம் இனம் என நெருங்கி வரும்படியிருந்ததாம். மேலும் ‘ஜாதிச் செருக்காலே பூமியை உழுது கொண்டு திரியும். பிரளயம் கொண்டு உழுகைக்கு பூமியில்லா-வன்று தன் வயிற்றில் வைத்துக் காக்கும்’ என்பதாம். திருவிக்கிரமனுய் அவதரித்த காலத்தில் தன் பிரிய நாயகியான பூமிப் பிராட்டியின் அபிமானத்துக்குரியவளான பூமியை அளக்கப் போகிறோம் என்னும் மிக்க மகிழ்ச்சியால் “நிலமகள் பிடிக்கும் மெல்லடி” (திருவாய் 9-2-10) என அவள் தனக்குத் தாரகமென மெல்லப் பிடித்துவிடும் தன் மென்மையான திருவடிகளால் அளப்பது போல் தடவிக் கொடுத்தான்! “நப்பின்னை கொங்கை மேல் வைத்துக் கிடந்த மலர் மார்பன்” (திருப்பா 19) என்றவாறு கிருஷ்ணவதாரத்தில் நப்பின்னைப் பிராட்டியின் இருகொங்கைகளையும் தனக்கு அரணுகக் கொண்டு கிடந்தான்! அர்ச்சையிலோ ‘தென்னனுயர் பொருப்பும் தெய்வ வடமலை என்னும் இவையே முலையாவடிவமைந்த” (பெரிய திருமடல்) என்றவாறு பூமிப்பிராட்டியின் முலைத் தடங்களாகத் திகழும் திருமாலிருஞ்சோலை மலையிலும் திருவேங்கடமலையிலும் படுகாடு கிடக்கிறுன்! இவ்வாறெல்லாம் தன் அன்பைக் காட்டிடும் அவன் வராஹாவதாரத்தில் அவள் கொங்கையைக் கருத்திற் கொண்டு குத்தித் திரிந்தானில்லை. மாறுகத் தான் எடுத்த அவதாரத்தின் மெய்ப்பாடு தோற்றும்படி பூமியை எங்கும் குத்திக் கிளறித் திரிந்தான்! இவ்வாறு அபிமானத்திற்குரிய பூமியானது பிரளயபத்திலே அழிய விருந்ததைக் காப்பாற்ற வேண்டி அதனை விழுங்கித் தன் வயிற்றிலே வைத்திருந்து காப்பாற்றினன் என்பதே. அர்ச்சாவதார நிலையிலும் ‘முத்தக் காசு’ என்னும் கோரைக் கிழங்கை அமுது செய்விக்கும்படியாய்த் தன்னைத் தாழ்த்திக் கொண்டு தோன்றினன். ஸ்ரீ முஷ்ணம் என்னும் திருப்பதியில் பூவராஹப் பெருமானுக்கு இன்றும் கோரைக் கிழங்கு அமுது செய்விக்கப்படுகிறது.

வலிமிக்க இவ்வராஹம் கடலில் மூழ்கி பாதாளத்தில் ஒளிந்து கொண்டிருந்த இரணியாக்ஷனுடன் போரிட்டுத் தன் கூரிய கோட்டாற் குத்திக் கொன்றது.அண்ட பிந்தியில் ஒட்டிக் கிடந்த இப்பூமியைத் தன் கோட்டாற் குத்தி யெடுத்துக் கொண்டு மேலே வந்தது. “பொரு கோட்டோரேன மாய்ப்புக் கிடந்தாய்க்கு அன்று உன் ஒரு கோட்டின் மேல் கிடந்ததன்றே” (முதல் திருவந். 9) என் உலகமளந்து கொண்டவன்று திருவிக்கிரமனின் ஓர் திருவடிக்குள் அடங்கிக் கிடந்த இப்பூமி வராஹப் பெருமானின் பல்லின் நுனிக்குக்கூட போதாதாகவிருந்ததாம். என்னே ஆச்சர்யம்! என வியப்படைகிறுர் பொய்கையாழ்வார். வராஹப் பெருமானுக்கு நெற்றியில் கஸ்தூரி திலகமிட்டாற்போல் விளங்கிற்று என இவ்வழகிலே திளைத்திடுகிறுர் திவ்யகவி பிள்ளைப்பெருமாளய்யங்கார் (அஷ்டப்ரபந்தம்).

இவ்வாறு திலகம் போன்று தோன்றும் பூமியை மீட்டுக் கொண்டு வர இவ்வளவு பெரிய உருவம் எடுக்க வேணுமோ? என்பதற்கு பெரியவாச்சான்பிள்ளையின் இனிமையானதோர் காரணம் காட்டுவதைக் காண்போம். “உதாரனுயிருப்பானெருவன் நாலு பேருக்கு சோறிட நினைந்து நாற்பது பேருக்கு இட்டு மிகும்படி சோறுண்டாக்குமாபோலே ரக்ஷ்யத்தினளவன்றிறே ரக்ஷகனின் பாரிப்பு” என்பது. ஈகைமிக்கானெருவன் நான்கு பேர்களுக்கேனும் சோறிட வேண்டுமென்று நினைத்து நாற்பது பேர்களுக்கு சோறிட்ட பின்னரும் சோறு மிகுந்திருக்குமாறு உணவு தயார் செய்து வைத்திருப்பது போல் தான் காப்பாற்றும் பொருளின் அளவின்றி அதற்கு மேலும் அவனது ரக்ஷகப் பாரிப்பு விஞ்சியிருக்கும் என்பதைக் காட்டுவதாக வமைந்தது அவனது பெரிய உருவம்.

‘நான்றில ஏழ்மண்ணும் தானத்தவே
பின்னும்
நான்றில ஏழ்மலை தானத்தவே
பின்னும்
நான்றில ஏழ்கடல் தானத்தவே
அப்பன்
ஊன்றியிடந்து எயிற்றில் கொண்ட”

(திருவாய் 7-4-3) என ஏழு தீவுகளும் ஏழுமலைகளும் ஏழு கடல்களும் அதனதன் இடத்திலேயிருக்குமாறு, சிந்திச் சிதையாமே மிகப்பதவிசாக வெளிக் கொணர்ந்து வைத்த வழகிலே ரமித்துக் கிடக்கிறுர் நம்மாழ்வார். தன் உடைமையைக் காப்பாற்றுவதில் இன்ன வழிமுறையைத் தான் கையாள வேணும் என்றிருந்தானில்லை. அந்தந்த சந்தர்ப்பங்களுக்கேற்றவாறு வராஹ நாயனுர் போன்று தன் தலையாலே சுமந்தும், யாரும் விரும்பாமலிருக்கும் நிலையில் அவர்கள் சிரசிலே தன் திருவடியை வைத்தும் காப்பாற்றுவான்.

“பேசியிருப்பனகள்” (நாச். திருமொழி. 11.8) என்று பூமிப் பிராட்டியிடம் பேசியிருக்கும் வார்த்தைகள்:

ஸ்திதே மனஸி ஸுஸ்வஸ்தே சரீரே
ஸதி யோ நர:
தாது ஸாம்யே ஸ்திதேஸ்மர்தா விச்வ
ரூபம் ச மாமஜம்
ததஸ்தம் ம்ரியமாணந்து காஷ்ட
பாஷாண ஸன்னிபம்
அஹம்ஸ்மராமி மத்பக்தம் நயாமி
பரமாம் கதிம்.

என்பதுவே. வாதம் பித்தம் ஸ்லேஷ்மம் ஆகிய இம்மூன்றும் ஒன்றை ஒன்று விஞ்சியிராது சமநிலையில் உள்ளதாய் “கிளரொளியிளமை கெடுவதன் முன்னம்” (திருவாய் 2-10.1) என ஒளிவிடும் இளமைப் பருவத்தில் மனம் போனபடி சிற்றின்ப விஷயங்களில் மண்டித்திரியாது சேதனம் எனப்படும் யாவற்றையும் தன் சரீரமாக கொண்டவனும் விஸ்வரூபியும், பிறப்பிலியானவன் ஸௌலப்யம் ஸௌஸீல்யம் வாத்ஸல்யம் ஆகிய தன் எளிமைக் குணங்களை நம் கண்ணுக்கு விருந்தாக்கிக் கொண்டு தோன்றிய வராஹப் பெருமானை மனத்தால் தியானித்தால் அந்திம தசையில் அவனை நாம் நினைக்காவிடினும் அவன் நம்மை நினைந்திருந்து மரண வேதனையும், யம பயமும் மறுபடி கர்ப்பக்குழி வாசமும் இல்லாது செய்வான். மேலும், இதற்கு மேல் இல்லை என்னும்படியான பரம புருஷார்த்தமான “விண்ணோர்கள் எப்பொழுதும் பார்த்துக் கொண்டே ஆனந்தமடைகிறார்கள்” என்றவாறு தாயும் தகப்பனுமான சேர்த்தியில் (மிதுனம்) ஒன்றியிருந்து என்றும் ஆனந்தக் கடலிலே திளைக்கச் செய்வான்.

---

(41-ம் பக்கம் தொடர்ச்சி)

“ருக்ப்யோ ஜாதாம் ஸர்வசோ மூர்த்தி
மாஹு:
ஸர்வா கதிர்யஜுஷீ ஹைவ சச்வத்
ஸர்வம் தேஜ: ஸாமரூபம் ஹி சச்வத்
ஸர்வம் ஹீதம் ப்ரும்ஹணாஹைவ
ஸ்ருஷ்டம்”

இயற்கையிலுள்ள பொருள்கள் அனைத்தும் ருக் வேதத்திலிருந்து தோன்றின. மாறுபாடு அடைதலாகிய கதிசீலம் அதாவது செயல்படுவது யஜுர் வேதத்தினால் தோன்றியது. ஒளி உருவமான சூரியன்,விண்மீன்கள், மின்னல் முதலியன ஸாம வேதத்தினால் தோன்றின என்கிறது வேதம்.

மேலும், ‘ருசம் வாசம் ப்ரபத்யே’ என்பதால் ருக்குகள் என்ற பெயர் சொற்களுக்கும் உண்டு என்பதாயிற்று. ‘வாசிமா விச்வா புவனானி யர்பிதா:’ ‘பூ:-புவ:-ஸுவ: எனப்படும் உலகங்கள் அனைத்தும் ‘வாக்குகளில் அர்ப்பணம் செய்யப்பட்டன’ என்றும், ‘மனோ யஜு: ப்ரபத்யே’ மனம் என்கிற கதிக்கும் ஸ்திதிக்கும் ஹேதுவானது யஜுர் வேதம் என்றும் வேதம் கூறுகிறது.

“அயம் வாவயஜுர் யோயம் பவதே, ஏஷஹி யன்னே வேதம் ஸர்வம் ஜனயதி, ஏதம்யந்தமித மநுப்ர ஜாயதே, தஸ்மாத்வாயுரேவ யஜுர்:, அயமேவாகாசோ ஜூ:, யதிதமந்தரிக்ஷம் ஏதம்ஹ்யாகாச மநுஜவதே-தததேத் யஜுர் வாயுச்சாந்த ரிக்ஷம்ச-சதபதம்” இதன் பொருள்-“யஜுஸ் என்னும் சொல் ‘யத்-இன்கதௌ-கதிமான் - செயலாற்றுபவன் என்கிற சொல்லும், ஜூ எனப்படும் ஆகாயத்தை உணர்த்தும் சொல்லும் சேர்ந்து ‘யஜுஸ்’ என்ற சொல் ஆயிற்று.எனவே இந்த வாயு ஆகாயம் என்பனவற்றால் உலகம் தோன்றி நிலை பெறுகிறது என்பதாம். ஆகையால் வாயு-ஆகாயம் என்பனவும் ‘யஜுஸ்’ என்பதற்குப் பொருள்களாயின.

ய ஏதஸ்மின் மண்டலேபுருஷ ஸோக்னி:
தானி யஜூம்ஷி, ஸயஜுஷாம் லோக :

என்பதால் யஜுஸ் என்பதற்கு அக்னியும் பொருளாகும். ‘ஸாம ப்ராணம் ப்ரபத்யே’ என்பதால் பிராணன் ஸாம என்னும் சொல்லால் அறியப்படுகிறது. ஆகவே, உலகம் தோன்றுவதற்கு வாக்கு-மனம்-பிராணன் என்பன மூலகாரணங்கள் எனவும்,இவை மூன்றும் ‘வேதம்’ என்னும் சொல்லால் அழைக்கப்படுகின்றன. ஆகையால் உலகமும் ‘வேதம்’ என்ற சொல்லால் அழைக்கப்படுகிறது.

மேலும் உபநிஷத்துக்கள் ரயி (அக்னி)-ப்ராணன் என்பன சேர்வதால் உலகம் உண்டாகிறது எனக் கூறுகின்றன. “அக்னீ ஷோமாத்மகம் ஜகத்” ஸூரியன் உதிப்பதை “ப்ராண: ப்ரஜானாம் உதயத்யேஷ ஸூர்ய:”-‘உயிரினங்களுக்கு உயிராகிய ஆதவன் தோன்றுகிறான்’ என்று வேதம் புகழ்கிறது. இந்த பிராணனில் பல வகைகள் உண்டு. ரிஷி பிராணன், பித்ருப்ராணன், தேவப்ராணன் என்பன போல பொதுவாகப் பிராணன்கள் அனைத்தும் ‘தேவ’ என்னும் சொல்லால் அழைக்கப்படுகின்றன.

ரிஷிப்ய: பிதரோஜாதா: பித்ருப்யோ
தேவதாநவா
தே வேப்யச்ஜகத் ஸர்வம் சரம்
ஸ்தாண்வநு பூர்வச:

ரிஷி பிராணனிலிருந்து பித்ருப்ராணனும் அவற்றிலிருந்து தேவபிராணனும் அதிலிருந்து உலகங்களும் உண்டாயின என்பது வேத மந்திர பொருளாகும். புராணங்களில் கசியபர் முதலிய முனிவர்களால் விலங்கு பறவை முதலியவையும் தோன்றியதாகக் கூறப்படுவது இங்கு நினைவிற் கொள்ளத்தக்கது. ருக் - யஜுஸ் - ஸாமங்களனைத்தும் பிராண உருவங்களானவையே அக்னியே பிராணன். ஸோம என்னும் ஆஹுதி நெருப்பில் சேர்வதால் உலகம் தோன்றுகிறது. அதாவது அக்னியும் பிராணனும் கலந்து உலகப் பொருள்களைத் தோன்றுவிக்கின்றன.

அக்னியே ஆதவன்.சூரியன். மூன்று வேதங்களின் உருவம்.‘காயத்ரி’ என்னும் மந்திரத்தால் அவன் உபாஸனை செய்யப்படுகிறான். காயத்ரி மந்திரத்தின் பொருள் விளக்கமே இராமாயணம். இராமன் சூரிய வமிசத்தில் பிறந்தவனாதும், காயத்ரி மந்திரத்தின் பெருமையை உணர்ந்த தவ முனி விச்வாமித்ரரின் தொடர்பு கொண்டதும் ஆராய்ந்து அறியத்தக்கன. வேதப் பொருளாகிய பரமன் தசரத குமாரனாகப் பிறந்ததும் வேதமே இராமாயணமாக அவதரித்தது. அந்த காப்பிய நாயகனின் முன்னிலையில் அன்னவன் மைந்தர்களாலேயே அரங்கேற்றம் செய்யப் பெற்று, உண்மைப் பெருமைகளைக் கொண்டது இராமாயணம் எனும் அவ்வேதமே என்பதில் ஐயம் தோன்றஇடமில்லை அன்றோ!

# ஸத்குருவின் பெருமை

குரு என்ற பதத்தை, 'கு+ர்+உ' எனப் பிரித்தால் 'கு' காரத்துக்குச் சித்தியைக் கொடுப்பவன் எனவும்; 'ர' காரத்துக்குப் பாவத்தைக் கொளுத்தும் தீயெனவும்; 'உ' காரத்துக்குச் சிவன் எனவும் பொருள் கூறலாம். அதாவது குரு என்பவர் இம் மூன்று தன்மைகளும் நிறைந்தவராவர். குரு என்ற சொல்லுக்கு இருளை அகற்றுவது என்ற பொருளும் உண்டு. மனிதன் தன் ஆத்ம ஸ்வரூபத்தை அறியத் தடையாக இருப்பது அவனுடைய ஆணவ, கார்மிக, மாயிக மலங்களாகும். இம்மும்மலங்களையும் நீக்கி நம் ஆத்ம ஸ்வரூபத்தைக் காட்டி, அஞ்ஞான இருளை அகற்றி ஞான ஒளியை உதிக்கச் செய்யும் உத்தமமான வழிகாட்டி ஸத்குரு ஆவார். அவர் இறைவனும், இறை அருள் பெற்றவரும் ஆவர். குருவை,

"குருர் ப்ரஹ்மா குருர் விஷ்ணு: குருர்
தேவோ மஹேஸ்வர: |
குரு: ஸாக்ஷாத் பரம்ப்ரஹ்ம தஸ்மை
ஸ்ரீ குரவே நம: ||",

என்று உயர்த்திக் கூறுவதிலிருந்து நாம் குருவையே பிரம்மாவாகவும், திருமாலாகவும், மகேசுவரனை தேவனாகவும் போற்ற வேண்டுமென்றும்; அவ்வளவு பெருமை வாய்ந்த குருவை பர பிரம்மமாக உணர்ந்து நமஸ்கரிக்க வேண்டும் என்றும் தெளிவாகத் தெரிந்து கொள்ள வேண்டும்.

ஸ்ரீ சங்கர பகவத் பாதர் அருளிய "சத சுலோகி" என்ற நூல் வேதாந்த கேஸரீ என்று போற்றப்படும். இந் நூலின் முதல் இரண்டு சுலோகங்களில் குருவினுடைய மகிமை சிறப்பித்துக் கூறப்பட்டுள்ளது. ஆத்ம ஞானத்தை உபதேசிக்கும் குருவை பரம சிவனாக எண்ணி பக்தியுடன் வழிபட்டு வரவேண்டும். அவ்வாறு ஆராதிப்பவனுக்கு ஞானத்தின் பலனான முத்தியும் கிடைத்து விடுவதாக "யோக சிகோபநிஷத்" என்ற நூல் கூறும். நல்ல பெருமை வாய்ந்த ஸத் குருவுக்குக் கற்பகத்தரு, காம தேனு, சிந்தாமணி போன்ற அதிசயமான பல பொருள்கள் நிறைந்த மூவுலகங்களிலும் நிகரான பொருள் ஒன்று கூடக் காண முடியாது. குருவிற்கு இணையான பொருள் இவ்வுலகில் இல்லை என்பது உண்மையே! ஆனால் அவருக்கு நிகராகக் கூறும் விஷயத்தில், "ஸ்பர்சம்" என்ற ஒரு வகை மணியை உதாரணமாக எடுத்துக் கொள்ளலாம். ஸ்பர்சம் என்ற மணியானது தன்னையடைந்த இரும்பைத் தங்கமாகவே செய்து விடுகிறது. எனவே இம்மணியை குருவிற்கு இணையாகக் கூறலாம். ஸ்பர்ச வேதிக் கல்லைப்போல தன்னை வந்தடைந்த அறிவில்லாத சீடனை குரு தன் உபதேசத்தால் அறிவுள்ளவனாகச் செய்து விடுகிறார். எனினும் ஸ்பர்ச மணியைக் குருவிற்குப் பொருத்தமான உபமானமாகக் கூற இயலாது. குருவின் உபதேசத்தால் பரம்பொருளாகவே நிலைத்து நிற்கும் ஜீவன் முக்தனான சீடன் குருவருளால் குருவின் தன்மையை அடைந்து; தன்னை வந்தடையும் சீடனையும் குருவாக்கும் சக்தியைப் பெற்று விடுகிறான். ஸ்பர்ச மணியோ என்றால் தங்கமாக ஆக்கிய இரும்பை ஸ்பர்ச மணியாக்க முடியவில்லை. மேலும், அதனால் தங்கமான இரும்பானது தன்னுடன் சேர்ந்த வேறொரு இரும்பைத் தங்கமாக்கவும் முடியவில்லை. ஆகையால் குரு உவமையற்றவர் என்றும், அவருக்கு இணையாகக் கூற மூவுலகிலும் பொருள் இல்லை என்றும் கூறலாம். நல்ல மணத்துடன் கூடிய சந்தன மரத்தைச் சுற்றியிருக்கும் மற்ற மரங்களும் நறுமணத்துடன் திகழ்கின்றன. அருகில் வந்தவர்களின் தாபத்தை வாசனையுடன் கூடிய காற்றால் இம் மரங்கள் நீக்கி விடுகிறது. ஸத் குருவிடமிருந்து நல்லறிவு பெற்ற சீடர்களோ தங்களை வந்தடைந்த ஜீவர்களுக்கு நல்லுபதேசம் செய்து அவர்களை ஆத்யாத்மிகம், ஆதிபௌதிகம், ஆதிதைவிகம் என்னும் மூன்று விதமான தாபங்களிலிருந்தும் பாவங்களிலிருந்தும் விடுவித்து விடுகின்றனர். ஆசார்யர்களைப் போலவே சீடர்களும் அடியார்களைப் பிறப்பு இறப்பாகிய பெருங்கடலிலிருந்து கரையேற்றி விடுகின்றனர்.

---

திரு. கே. நாராயணசாமி,
*மயிலாடுதுறை*

---

ஆசார்ய மூர்த்தமாய் எழுந்தருளிய குருவானவர் மௌனியாய் நமக்கு மோன நிலையை உணர்த்துவதால் ஒரு தாயின் கர்ப்பத்தில் போய் பிறப்பது இனி கிடையாது என்று தாயுமானவர் குருவின் பெருமையைச் சிறப்பித்துக் கூறுவார். பிறவிக் கடலைத் தாண்ட வைக்கும் ஆசார்யனின் பெருமை குறித்து நம்மாழ்வார்,

"காதம் பலவுந்திரிந்துழன்றேற் கங்
கோர் நிழலில்லை நீருமில்லை உன்
பாத நிழலல்லால் மற்றோர் உயிர்ப்
பிடம் நானெங்குங்காண்கின்றிலேன்"

என்று புகழ்ந்து பாடியுள்ளார். போக்கிடந்தெரியாது மயங்கி இருப்பது போல தலை சிறந்த குருவின் உபதேசம் பெறாமல் மக்கள் மயங்கி நிற்பர். கடலைக் கப்பலின் உதவியில்லாமல் கையால் நீந்திக் கடக்க முடியாது. அதுபோல ஸத் குருவின் உபதேசமில்லாமல் பிறவிப் பெருங்

கடலைக் கடத்தலும் இயலாது. இதனை,

“கரவிலாத பேரன்பினுக்கு எளிவருங் கருணைக்
குரவனூர் அருளன்றி இக்கொடிய வெம்பாசம்
புரையில் கேள்வியாற் கடப்பது புணை யினாலன்றி
உரவு நீகக்கடல் கரங்கொடு நீந்துவ தொக்கும்”

என்று திருவிளையாடல் புராணத்தில் வரும் படலச் செய்யுளிலிருந்து அறியலாம். வள்ளல் பெருமானால் வியந்து கூறப்பட்ட வாதவூரடிகளுக்கு இவ்வுபதேசம் செய்யப்பட்டுள்ளது. இத்தகைய ஒரு உயர்ந்த ஸத் குருவை ஒருவன் வாழ்க்கையில் பெற்று அவருடைய நல்லுபதேசத்தைப் பெற வேண்டும்.

மாதா, பிதா, ஆசார்யன், அதிதி இவர்களிடத்து மனித புத்தியைச் செய்யாது தேவ புத்தியைச் செய்வாயாக என்று தைத்திரியோபநிஷத் கூறும். ஒரு சீடனின் உள்ளத்தில் உயர்ந்த நிலையை அடைந்த ஸத் குருவின் இலட்சணத்தைப் பற்றித் திருமந்திரம் பலவாறு கூறியுள்ளது. பாம்பு தீண்டி நஞ்சு தலைக்கேறி விட்ட ஒருவனுடைய நஞ்சை விஷ வைத்தியர் ஒருவர் கருடோஹம் பாவனையால் கருட மந்திரத்தை உச்சரிப்பதாலும், கருடத்தியானத்தாலும் தானே கருடனாகி அவனை நோக்குவதால் நஞ்சை நீக்கி உயிர் பிழைக்கச் செய்வானும். அதுபோல் ஸத் குருவானவர் சிவோஹம் பாவனையால் பஞ்சாக்ஷர மந்திர ஜபத்தாலும், சிவத்தியானத்தாலும் தானே சிவனேயாகி சீடனை நோக்க அவனுடைய பாசங்களும், பாவங்களும் பறந்தோடி விடுவதை,

“கருடன் உருவங் கருதும் அளவில்
பருவிடந் தீர்ந்து பயங்கெடுமா போல்
குருவின் உருவங்குறித்த அப்போதே
திரிமலம் தீர்ந்து சிவனவனுமே”

என்ற திருமூலர் திருமந்திரப் பாடல் உணர்த்தும். இறைவன் ஒருவிதத்திலும் தனக்கு எவரும் நிகரில்லாதவன். அவனுடைய திருவடிகளை நினைப்பவர்களின் மனக்கவலை நீங்கும். மற்றவர்களால் மனக்கவலையை மாற்ற இயலாது. வள்ளுவர் இதனை,

“தனக்குவமை இல்லாதான் தாள் சேர்ந்தார்க்கல்லால்
மனக்கவலை மாற்றல் அரிது,”

என்ற குறளில் குறிப்பிடுவார். தெய்வத்தைச் சென்றடைவது என்பது எல்லோராலும் இயலாத ஒன்றாகும். ஆனால் தெய்வம் தெளிந்த ஆசாரியனை அடைந்து அவரைப் பேணி வந்தால், தெய்வத்தை உறுதியாக அறியலாம் என்பதை இளங்கோவடிகள், “தெய்வம் தெளிமின், தெளிந்தோர் பேணுமின்” என்று கூறுவார். மேகங்கள் சூழ்ந்த வானிலே சூரியனைக் காண இயலாது. ஆனால் மேகங்கள் விலகியவுடன், தெளிவடைந்த ஆகாயத்தில் கதிரவனைச் சுலபமாகக் காணலாம். பலவிதமான ஆசைகளாலும் கவலைகளாலும் சூழ்ந்த மனித உள்ளத்திலே இறைவனைக் காண இயலாது. காற்று வீசி மேகங்கள் விலகியதும் சூரியன் தெரிவது போல, இறை அருள் பெற்ற ஒரு ஸத்குருவின் நல்லுபதேசத்தால் மனதில் உள்ள ஆசைகளும் கவலைகளும் நீங்கி உள்ளம் தெளிவடையும், தெளிவடைந்த உள்ளத்திலே குருவின் அருள் துணைக் கொண்டு இறை உறுதியாகக் காணலாம். ஒருவனை வனுக்கு மனத் தெளிவானது குருவினால்தான் ஏற்படுகிறது என்பதை,

“தெளிவு குருவின் திருமேனி காண்டல்,
தெளிவு குருவின் திருநாமம் செப்பல்,
தெளிவு குருவின் திருவார்த்தை கேட்டல்,
தெளிவு குருவுரு சிந்தித்தல் தானே.”

என்ற திருமந்திரப் பாடலிலிருந்து அறியலாம்.

ஒருவனை எப்போது இறைவன் அருட் குருவாகி வந்து அவனை ஐம்புல வேடர்களின் பிடியிலிருந்து பிரித்து மலங்களைப் போக்கித் தானாக்கித் தன் திருவடிக்கீழ் வைப்பன் என்பதை சிவஞான சித்தியார் அழகாகக் கூறுகிறது. வேடர்களால் அபகரித்துச் செல்லப்பட்ட ஒரு மன்னவனின் மகன் காட்டில் நீண்ட காலம் வாழ்ந்தான். இழந்த தன் மகனைத் தேடுவதற்காக அரசன் பணியாளர் பலரை நான்கு திசைகளிலும் அனுப்பினான். தேடிச் சென்ற பணியாளர்களில் சிலர் மேற்படி காட்டில் அரசனின் மகனை அடையாளங் கண்டு வந்து அரசனிடம் கூறினர். அரசனும் நேரில் வந்து மைந்தனைக் கண்டு வருந்தி, அவன் பிறப்புணர்த்தி அவன் அரச குமாரன் என்பதை அறிவித்தான். காட்டு வாழ்க்கையில் வெறுப்புண்டாகுமாறு செய்து, நாட்டு வாழ்க்கையில் விருப்புண்டாக்கி அழைத்துச் சென்றான். தனக்குரியவை அனைத்தையும் தன் மகனுக்கு அளித்து அவனை இளவரசனாக்கினான். அதுபோல ஒருவனுடைய ஆன்மாவானது ஐம்புல வேடர்களின் சேரியில் அகப்பட்டுத் துணைவனாகிய இறைவனை அறியாது துயரத்தில் ஆழ்ந்து கிடக்கும் பொழுது, இறைவன் அருட் குருவாகி வந்து அவனை ஐம்புல வேடர்களிலிருந்து பிரித்து மலங்களைப் போக்கித் தானாக்கித் தன் திருவடிக்கீழ் வைப்பன்.

ஒரு ஸத்குரு தன் சீடனுக்குச் செய்யும் உபகாரத்தைத் தீக்ஷை என்பர். “தீக்ஷா” என்ற சொல்லுக்கு ஞானத்தைக் கொடுத்துப் பாசத்தை நீக்குவது என்பது பொருளாகும். தக்க ஸத்குருவால் தீக்ஷை பெற்று மந்திர உபதேசம் பெறும் சீடனின் கர்ம பாசம் விலகி ஆணவ மலம் அகன்று மனம் பக்குவம் ஆகி தெளிவடையும். சீடனுடைய மலங்கள் அனைத்தும் அழிந்து செந்நெறி செழித்தோங்கும். மேலும் ஸத்குருவின் அருளிருந்தால் மோக்ஷ லக்ஷ்மி ஸித்திப்பாள். சீடன் ஸத்குருவிற்கு தனது உடல் பொருள் ஆவி அனைத்தையும்

அளித்து அவருக்குப் பணிந்து வாழ வேண்டும். இறை அருள் பெற்றவரே ஸத்குரு ஆவார். தத்தாத்ரேயர் அத்வைத சித்தாந்தத்தை நிலைநாட்டிய ஆசாரிய வரிசையில் முதலாமவராக நிற்பவர். பின்னரே, "நாராயணம், பத்மபுவம், வஸிஷ்டம்......" என்ற குருபரம்பரை விரிகிறது. சாஸ்வத ஐஸ்வர்யமான ஆத்ம சாம்ராஜ்யத்தை நமக்குக் காட்டிக் கொடுத்த இந்த ஆசார்ய பரம்பரையைத் தினமும் நாம் இந்த சுலோகத்தால் சொல்லி நமஸ்கரித்தால் நமக்குப் பல நலன்கள் விளையும்.

ஸ்ரீவித்யாதி மந்திர சாஸ்திரங்கள் ஸத்குருவின் மகிமையைப் பற்றி மிகவும் சிறப்பித்துக் கூறும். தேவி குருவின் வடிவமாக இருப்பதை லலிதா ஸஹஸ்ர நாமத்தில் "குருமூர்த்தி:" என்ற நாமமும், மூகபஞ்சசதீ ஆர்யா சதகம், "குருமூர்த்தே த்வாம் நமாமி காமாக்ஷி" என்றும் கூறும். குரு வேறு, அம்பாள் வேறு அல்ல. அஞ்ஞான இருளைப் போக்கித் தெய்வீக உணர்வைத் தந்தருள்வதற்காக தேவி எடுக்கும் வடிவம் குரு. சொல் வடிவமான மந்திரத்தை ஆசார்ய வடிவிலிருந்து அருள்பவள் தேவியே ஆவாள். ஆசார்யனும், அம்பிகையும் ஒன்று என்ற ஐக்கிய பாவனை ஏற்படும்போதுதான் மந்திரம் சித்தி பெற முடியும். குரு மண்டலம் நீண்டு சங்கிலித் தொடர் போல அமைந்ததாகும். ஆரம்பமும் முடிவும் இல்லாது பிரித்தறிய முடியாதவாறு குரு மண்டலம் வட்ட வடிவில் அமைந்துள்ளது. ஸதா சிவனை ஆதிகுரு என்ற ஸம்பிரதாயத்தில் நமது குருவாகவுமாகி முடிவற்ற குரு மண்டலமாக இருப்பவள் தேவி. லலிதா ஸஹஸ்ர நாமத்தில் "குரு மண்டல ரூபிணி" என்னும் நாமம் இவ்வளவு சீரிய கருத்தை அடக்கியுள்ளது. நமக்கு மந்திரத்தை உபதேசித்த ஆசார்யனுக்குத் தேவி பிரியமானவள். ஸநகாதி முனிவர்களின் ஐயத்து ஐயங்களையும், மௌன வடிவிலிருந்தே சின் முத்திரையினாலேயே நீக்கிய தக்ஷிணாமூர்த்தி ரூபிணி என்ற வடிவமாக அமைந்தவள் தேவி. எனவே பரதேவதைக்கும் ஸத்குருவுக்கும் கொஞ்சங்கூட பேதமில்லை என்று, "குருமூர்த்தி:, குரு மண்டலரூபிணி, குருப்ரியா, தக்ஷிணாமூர்த்தி ரூபிணி" என்ற திருநாமங்கள் உறுதி செய்வதை அறியலாம்.



ஸ்ரீ வேங்கடேஸ்வரசுவாமி கோயில் — ஹைதராபாத். (ஆ. பி.)

ஸ்ரீ காமகலா விலாஸமென்னும் கிரந்தத்தில் ஸத்குருவின் பெருமை கூறப்பட்டுள்ளது இங்குக் குறிப்பிடத் தக்கதாகும். பிரபஞ்சமென்னும் பெருங்கடலே ஜனன, மரண வடிவமான ஸம்ஸார பந்தமாகும். ஆசை என்னும் காமமே அதில் நீராகும். மிகுந்த சஞ்சலமான மனோவிருத்திகளே அக்கடலின் அலைகளாகும். இத்தகைய ஸம்ஸாரப் பெருங்கடலில் மூழ்கித் தவிக்கும் ஜீவர்களைத் தனது அனுக்ரஹமாகும படகில் ஏற்றிக் கரை சேர்க்கும் படகோட்டியே ஸத்குருவாவார். அவருடைய அருளில்லாமல் ஜனன, மரண ரூப ஸம்ஸார பந்தம் நீங்காது. எனவே ஸத்குருவின் பாதுகைகளுக்குப் பல கோடி நமஸ்காரங்கள் செய்ய வேண்டியது அவசியமானதாகும். மானிட வாழ்வில் நல்லதொரு குருநாதன் கிடைப்பது அரிது. அவ்வாறு கிடைத்த குருநாதனையும், மந்திர உபதேசத்தையும் கால நிலைகளால் ஏற்படும் மனமாற்றத்தினால் சீடன் இழந்து விடக்கூடாது. இந்துக்களாகப் பிறந்த அனைவரும் அவரவர் மனப்பக்குவத்துக்குத் தகுந்த மந்திர தீக்ஷை ஒன்றை ஸத்குரு ஒருவரிடம் பெற்று அதன்படி உறுதியாக நடந்தால், இறைவன் மலரடி அடைந்து பேரின்பம் எய்தலாம்.



# செய்திச் சுருக்கம்

படிவிழா :

கர்னடகம் மற்றும் ஆந்திர மாநிலங்களிலிருந்தும் பங்கேற்ற சுமார் 20 பஜனை மண்டலிகளைச் சார்ந்த ஆயிரத்திற்கும் மேம்பட்ட பக்தர்கள் கலந்து கொண்ட படிவிழா மிகச் சிறப்பாக திருப்பதியில் 14, 15 தேதிகளில் நடைபெற்றது. 14-6-87 அன்று இப் பக்தர்கள் பங்கு கொண்ட ஊர்வலத்தினை ஸ்ரீ கோவிந்தராஜ சுவாமி கோயிலில் முன்னாள் தி. தி. தே. செயலாட்சித் தலைவரும், பொறுப்பாண்மைக் குழுத் தலைவருமான திரு. சி. அன்னாராவ் அவர்கள் துவக்கி வைத்தார். அன்று மாலை திருப்பதி ஸ்ரீ அன்னமாச்சார்யா கலா மந்திரத்தில் கூடிய கட்டத்தில் முன்னாள் தி.தி.தே. செயலாட்சித் தலைவர் திரு. பீ. வி. ஆர். கே. பிரஸாத், தி. தி. தே. பொறுப்பாண்மைக் குழு உறுப்பினர் டாக்டர். சி. தேவநாதன், கர்னடக மாநில பிரமுகர் திரு. ஏ. பார்த்த சாரதி மற்றும், தி. தி. தே. தாஸ சாகித்ய திட்ட சிறப்பு அலுவலர் திரு. அப்பன்னசார்யா ஆகியோர் பங்கேற்று உரையாற்றினர். 15-6-87 அன்று மாலை திருப்பதி அலிபிரியில் பக்தர்களின் படிவிழாவினை ஸ்ரீ பாத ராஜ மடத்தைச் சார்ந்த ஸ்ரீ ஸ்ரீவிக்ஞானநிதி தீர்த்தா சுவாமிகள் துவக்கி வைத்தார். தி. தி. தே. சார்பில், டாக்டர். சி. தேவநாதன் அவர்கள் பஜனை மண்டலிகளுக்கு பஜனைக் கருவிகளை வழங்கினர். (இந்நிகழ்ச்சி சம்பந்தப்பட்ட புகைப்படங்கள் இவ் இதழின் உள் அட்டைப்பக்கங்களில் வெளியிடப்பட்டுள்ளன).

கோடைப்பள்ளி :

கன்னட தாஸர்களின் பெருமையைப்பரப்பிடும் வகையில், தி. தி. தே. தாஸசாகித்ய திட்டத்துறையின் சார்பில் கோடைப்பள்ளி ஒன்று திருப்பதி ஸ்ரீ அன்னமாச்சார்யா கலா மந்திரத்தில் 7-6-87 முதல் 13-6-87 வரை நடைபெற்றது. இக்கோடைப்பள்ளியினை தி. தி. தே. இணை செயலாட்சித் தலைவர் திரு. சி. விஸ்வநாத் ஐ.ஏ.எஸ். அவர்கள் துவக்கி வைத்தார். கர்னடகத்தைச் சார்ந்த 30 பிரமுகர்கள் இக்கோடைப்பள்ளியில் பங்கேற்றனர். திருவாளர்கள் பி. எம். கலிகலி, ஜெய தீர்த்தாசார்யா, வி. பிரபஞ்சன், கடிகிரிதாஸ், பேராசிரியர் பரத்துவாஜ் ஆகியோர் இப்பள்ளியின் வகுப்புகளை மேற்கொண்டனர். இது போது இராமாயணம், மகாபாரதம் மற்றும் கர்னடக ஹரி தாஸர்களின் பெருமை விளக்கி பேசப்பட்டன. மேலும் சென்னையைச் சார்ந்த திரு. வி. எஸ். கிருஷ்ணமூர்த்திராவ், பம்பாய் சகோதரிகளின் இன்னிசைக் கச்சேரிகள் நடைபெற்றன.

மற்றைய செய்திகள் :

ஆந்திர பிரதேச நெல்லூர் மாவட்டத்தின் முன்னாள் இணை ஆட்சியாளர் திரு. சி. விஸ்வநாத் ஐ.ஏ.எஸ். அவர்கள் தற்போது தி. தி. தேவஸ்தானத்தில் இணை செயலாட்சித் தலைவராக நியமிக்கப்பட்டுள்ளார்.

ஃ ஃ ஃ

ஆறு மடிப்புகளைக் கொண்ட ஒரு ஜதைக் கோயில் குடைகளை மற்றைய கோயில்களுக்குத் தி.தி.தேவஸ்தானம் 50% குறைந்த விலையில் வழங்கி வருகின்றது. 50% என்று வழங்கப் படும் அதன் மதிப்பான ரூ. 650 - தற்போது 725 - ஆக உயர்த்தப்பட்டுள்ளது.

ஃ ஃ ஃ

திருப்பதி அடுத்துள்ள திருச்சானூர் ஸ்ரீ பத்மாவதித் தாயார் கோயிலில் நடைபெறும் ஆர்ஜித சேவையான திருப்பாவாடையின் கட்டணம் ரூ. 1500/-லிருந்து ரூ. 3000/- ஆக உயர்த்தப்பட்டுள்ளது.

ஸாக்ஷாத்கார வைபவம் :

திருப்பதியிலிருந்து சுமார் 8 கி. மீட்டர் தொலைவில் உள்ள தி. தி. தேவஸ்தானத்தாரின் ஸ்ரீ நிவாச மங்காபுரத்திலுள்ள ஸ்ரீ கல்யாண வேங்கடேஸ்வர சுவாமி கோயிலின் ஸ்ரீஸாக்ஷாத்கார வைபவம் 3-7-87 அன்று வெகு விமர்சையாக நடைபெறும்.

## அறிவிப்பு

ஆந்திர மாநிலத்தின் 1950-ம் ஆண்டு பிராணிகள் மற்றும் பறவைகள் பலி தடுப்புச் சட்டத்தின் பிரிவு 3-இன்கீழ், சமயம் சம்பந்தப்பட்ட ஊர்வலங்கள், மாநாடுகள், சிறு கூட்டங்கள், விழாக்கள் ஆகியன நடைபெறும் பொது இடங்களில் எவரும் பிராணிகளை அல்லது பறவைகளை பலி இடுதல் கூடாது. மேற்படி சட்டத்தின் பிரிவு எண் 6-இன்கீழ், மேற்படி சட்டத்தை மீறுபவர்களுக்கு 3 அல்லது 5 மாதத்திற்குள்ளான சிறைத் தண்டனைக்கு அல்லது ரூ. 300 அபராதத்திற்கு அல்லது சிறைத் தண்டனைக்கும் அபராதத்திற்கும் உள்ளாவார்கள். ஆகவே பொது மக்கள் இதனால் அறிவிக்கப்படுவது யாதெனில் பொது இடங்களில் பிராணிகளை அல்லது பறவைகளை பலியிடுவதோ, கோழி மற்றும் அது போன்ற பிராணி மற்றும் பறவைகளை சண்டைகளுக்குட் படுத்துவதோ கூடாது என்பதாகும்.

(ஒ-ம்) ஹனுமந்தராவ்,
அரசு உதவி செயலர். (ஆ.பி.)

EDITED AND PUBLISHED ON BEHALF OF THE T. T. DEVASTHANAMS BY K. SUBBA RAO, M.A. AND PRINTED AT T. T. D. PRESS BY M. VIJAYAKUMAR REDDY MANAGER, T. T. D. PRESS, TIRUPATI-517501.

